மலர் 15
இதழ் 33

# கல்கி

## பொருளடக்கம்

மன்மத ஹு
பங்குனி 5

18, மார்ச் 1956



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 15
இதழ் 33

தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மன்மத ஸு
பங்குனீ 5

# ஐந்து ஆண்டில் ஐந்து மந்திரி சபைகள்!

மறுபடியும் வேதாளம் முருங்கை மரத்தில் ஏறிக்கொண்டகதையாக, மறுபடியும் திருவாங்கூர், கொச்சி காங்கிரஸ் கட்சியில் சிலர் வக்கரித்துக் கொண்டு விட்டார்கள்.

அதன் விளைவாக, திருவாங்கூர், கொச்சி மந்திரி சபை ராஜிநாமா செய்யும்படி நேர்ந்து விட்டது.

மேற்படி மந்திரி சபை ராஜிநாமா செய்ய நேர்ந்தது எதிர்பாராத விஷயமல்ல.

ஏற்கனவே, அச்சபையின் நிலைமை நித்திய கண்டமாகத்தான் இருந்து வந்தது.

தி-கொ சட்டசபையில் மொத்தம் உள்ள 117 ஸ்தானங்களில காங்கிரஸ் கட்சிக்கு 60 ஸ்தானங்கள் இருந்து வந்தன.

அதிகப்படியான அந்த இரண்டு மூன்று ஸ்தானங்களின் பலத்தைக் கொண்டே அது இதுவரையில் பல கண்டங்களிலிருந்து தப்ப முடிந்தது.

இப்போது அக்கட்சியிலிருந்து ஆறு அங்கத்தினர்கள் விலகிக் கொண்டதால் கட்சியின் அந்த அற்பமான பெரும்பான்மை பலமும் குன்றிவிட்டது.

எனவே, ஜனநாயக முறைக்கிணங்க தி—கொ. மந்திரிகளுக்கு ராஜிநாமா செய்வதைத் தவிர வேறு வழியிராமற் போய் விட்டது.

தி—கொ. ராஜ்யம் உருவாகி ஐந்து ஆண்டுகளே ஆகின்றன. இந்த ஐந்து ஆண்டுகளுக்குள் ஐந்து மந்திரி சபைகள் ராஜிநாமா செய்யும்படி நேர்ந்துள்ளது.

ஐந்து வருஷங்களுக்குள் இரண்டு தேர்தல்கள் நடந்தும் நிலையான மந்திரி சபை அமைய வழி பிறக்கவில்லை.

மேற்படி ராஜ்யம் சம்பந்தப்பட்ட வரையில் முதலில் ஆரம்பித்த கோணல் முற்றும் கோணலாக முடிந்திருக்கிறது. அதாவது இனி அங்கு சமீப காலத்தில் நிலைத்து நிற்கக்கூடிய சர்க்கார் ஏற்படுவதற்கு வழியில்லை என்றே தோன்றுகிறது.

முதல் ஐந்து வருஷத் திட்டம் முடிந்து, இரண்டாவது ஐந்து ஆண்டுத் திட்டம் ஆரம்பமாகி யிருக்கிறது. 1955—56-ம் ஆண்டு வரவு செலவுத் திட்டம் தி. கொ. சட்டசபையில் சமர்ப்பிக்கப்பட்டிருக்கிறது. ராஜ்யச் சீரமைப்பு விஷயம் உச்ச நிலையை அடைந்திருக்கிறது.

இந்தப் பிரச்னைகளை யெல்லாம் உறுதியுடனும் ஒற்றுமையுடனும் நின்று சமாளிக்க வேண்டிய சமயத்தில், தி. கொ. மந்திரி சபையில் நெருக்கடி ஏற்பட்டது துரதிர்ஷ்டவசமான காரியம் அல்லவா?

* * * *

மந்திரி சபை ராஜிநாமாவைப் பற்றித் தி.கொ. பிரதமர் ஸ்ரீ பி. கோவிந்தமேனன் சட்டசபையில் விடுத்துள்ள அறிக்கையில் ஒரு முக்கிய விஷயத்தைக் குறிப்பிட்டுள்ளார்.

தி. கொ. மந்திரி சபை ராஜிநாமா செய்யும்படி நேர்ந்ததற்கு எதிர்க் கட்சிகளின் போக்கு காரணம் அல்ல; காங்கிரஸ் கட்சியில் ஏற்பட்ட பிளவே காரணம் என்று கூறியுள்ளார்.

அதாவது காங்கிரஸ் கட்சியில் உள்ள பெரும்பான்மையோருடன் ஆறு அங்கத்தினர்களால் ஒத்துப் போக முடியவில்லை. அவர்களுடைய செய்கை தி. கொ. ராஜ்யத்தில் ஒரு நெருக்கடியை உண்டாக்கி விட்டது.

அந்த ராஜ்யத்தின் எதிர்கால அரசியல் நிலைபற்றி இப்போது எதுவும் சொல்லுவது சாத்தியமல்ல.

எதிர்க்கட்சிகளின் கூட்டு முயற்சியால் ஒரு கதம்ப மந்திரி சபை ஏற்பட்டாலும், அதன் வாழ்வு எவ்வளவு காலத்துக்கு நீடிக்கும் என்ற சந்தேகம் எழத்தான் செய்கிறது.

## "உங்களுக்கும் உதவுகிறோம்!"




அமெரிக்க உதவியினால் பலம் பெறும் பாகிஸ்தான் இந்தியாவைத் தாக்கினாலும், இந்தியாவுக்கு அமெரிக்கா உதவி செய்யும் என்று அமெரிக்க அயல்நாட்டு மந்திரி ஸ்ரீ டல்லஸ் கூறினார்.

ஆறு பேர்களின் செய்கைக்காக மூன்றாவது முறை தேர்தலை நடத்துவது என்பதும் சரியல்ல.

அது எப்படியாயினும், அண்டையில் உள்ள ஒரு ராஜ்யத்தில் இத்தகைய அவல அரசியல் நிலை இருந்து வருவதைக் குறித்துச் சென்னை ராஜ்ய மக்கள் வருத்தமோ, கலக்கமோ அடையாமல் இருப்பதற்கில்லை.

நாட்டின் நலனுக்கான பல பிரச்னைகளை வெற்றிகரமாகச் சமாளிக்க வேண்டிய சமயத்தில் கட்சி மாற்சரியத்துக்கும் வேற்றுமைக்கும் இடம் கொடுக்கக் கூடாது என்ற முக்கிய படிப்பினையையே தி. கொ. ராஜ்ய சம்பவங்கள் வலியுறுத்துகின்றன. சிறு சிறு ராஜ்யங்களாகத் துண்டித்துக் கொண்டு போவதினால், சிறு சிறு கட்சிகளுக்கிடையே பெரிய பெரிய மனத் தாங்கல்கள் ஏற்படுகின்றன என்பதும், அவற்றின் காரணமாக இம்மாதிரியான சிக்கல்கள் தோன்றுகின்றன என்பதும் நாட்டு மக்கள் இதிலிருந்து உணர்ந்து கொள்ள வேண்டிய முக்கிய உண்மையாகும்.

# அபிப்பிராயக் குழப்பம்

**யா**ரோ ஒருவன் "பஞ்ச பாண்டவர்கள் என்றால் யார், எத்தனை பேர்!" என்று கேட்டானாம்.

அதற்கு மற்றொருவன், 'அடாடா! பஞ்ச பாண்டவர்கள் என்றால் தெரியாதா! கட்டில் காலைப் போல் மூன்று' என்று சொல்லி, இரண்டு விரல்களைக் காட்டித் தரையில் ஒரு கோடு கீறி அதையும் அழித்து விட்டானாம்.

நமது முதன் மந்திரி திரு காமராஜ் அவர்கள் ராஜ்யப் பிரிவினையைப் பற்றிச் சமீப காலத்தில் செய்துவரும் சொற்பொழிவுகளைப் பத்திரிகைகளில் படிக்கும்போது இந்தக் கதைதான் நமக்கு ஞாபகம் வருகிறது.

சைதாப்பேட்டையில் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியின் நூற்றாண்டு விழா நடைபெற்றது. அங்கு திரு காமராஜ் நிகழ்த்திய உரையில் 'இரண்டு, அல்லது மூன்று ராஜ்ய இணைப்பு' என்னும் கருத்தை எதிர்த்திருக்கிறார். முக்கியமாக, தட்சிணப் பிரதேசக் கருத்தை வன்மையாகக் கண்டித்திருக்கிறார். அவர் கூறிய மொழிகள் இவைதான்:

"இணைப்பின் மூலம் அநுகூலம் கிடைக்கும் என்றெல்லாம் பேசுவது ராஜ்யங்களுக்கிடையே சண்டை உண்டாக்கிவிடும். ஒன்பது வருஷங்களுக்கு முன்பு தேசத்தை இரண்டாகப் பிரிப்பதற்கும், சமீபத்தில் ஆந்திராவைப் பிரிப்பதற்

ளும் முக்கிய காரணமாக இருந்தவர்கள் இப்போது பாஷாவாரிப் பிரிவினையை எதிர்க்கிறார்கள். இதையும் மற்ற விஷயங்களையும் மக்களுக்குச் சரியானபடி விளக்க வேண்டும். அதற்கு ஆசிரியர்கள்தான் ரொம்பத் தகுதியுள்ளவர்கள்."

திரு காமராஜ் அவர்கள் இங்கு குறிப்பிடுவது ஜவாஹர்லால் நேரு அவர்களையா அல்லது ராஜாஜியையா என்பது தெரியவில்லை.

சில நாட்களுக்கு முன் நிதி மந்திரி திரு சி. சுப்பிரமண்யம் கேரள—தமிழ் ராஜ்ய இணைப்பினால் ஏற்படும் அனுகூலங்களைப் பற்றிப் பேசினார். அவர் தமிழ் நாட்டுக்கு மட்டுமல்ல, இரு ராஜ்யங்களுக்குமே அனுகூலங்கள் உண்டு என்று தெளிவாக எடுத்துக் காட்டியிருக்கிறார்.

இதற்குப் பிறகு மார்ச்சு ஏழாம் தேதியன்று திரு காமராஜ் லயோலா கல்லூரியில் பேசினார். அந்தச் சொற்பொழிவில் கூட்டு முன்னணிக்காரர்களை வெளுத்து வாங்கியிருக்கிறார். அத்துடன், "தனித் தமிழ் ராஜ்யம் வேண்டுமென்று கூறுவதானால் அத்தகைய ராஜ்யம் ஏற்படுத்துவது எப்படிச் சாத்தியம் என்பதை முதலில் யோசிக்க வேண்டும். ஆந்திர, கன்னட, மலையாள மக்கள் நம் பக்கத்தில் இருக்கின்றனர். அவர்களிடமிருந்து பிரிந்து சமுத்திரக் கரையில் வாழ முடியுமா! நமக்குத் தனி ராஜ்யம் எதற்காக! நம் சக்திகளும் வசதிகளும் என்ன! இதையெல்லாம் கவனிக்காமல் ஜாலவித்தை செய்ய முயற்சிக்கிறது கூட்டு முன்னணி" என்று பேசியிருக்கிறார்.

இதைப் படிக்கும்போது திரு காமராஜ் தட்சிணப் பிரதேசக் கொள்கையை ஆதரிப்பது போல் தோன்றுகிறதல்லவா!

ஆனால் "உண்மையில் திரு காமராஜின் உள்ளத்தில் தமிழ் ராஜ்யம் பற்றியும் சரி, தட்சிணப் பிரதேசத்தைப் பற்றியும் சரி தெளிவான, உருப்படியான அபிப்பிராயம் கிடையாது" என்று சிலர் எண்ணுகிறார்கள்.

"ஒரே ஒரு மந்திரம் வைத்திருக்கிறார்: பொதுவாகப் பெருவாரியான மக்கள் அபிப்பிராயத்தை ஒரு கூட்டத்தில் சொல்லித் திருப்திப் படுத்த வேண்டியது; மற்றொரு கூட்டத்தில் பண்டித ஜவாஹர்லால் நேரு முதலிய மேலிடத்துக் காங்கிரஸ் தலைவர்கள் திருப்தியடையும் வகையில் பேச வேண்டியது" என்று வேறு சிலர் எண்ணுகிறார்கள்.

இந்தக் குழப்ப நிலையில் தமிழர்கள் எத்தனை நாள் இருக்க வேண்டுமோ! "இப்படியும் அப்படியும் பட்டுக் கொள்ளாமல் பேசுவதை விட்டு விட்டுத் தைரியமாக நாட்டுக்கு எது நன்மை என்பதை ஆராய்ந்து தாம் கண்ட முடிவை விளக்கிப் பகிரங்கமாகக் கூறுவது தலைவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய முறை" என்று நாம் திரு சுப்பிரமண்யம் பேசியிருப்பதைப் பாராட்டி மார்ச்சு நாலாந் தேதி "கல்கி" இதழில் எழுதியிருப்பதை மீண்டும் வற்புறுத்துகிறோம்.

# கலைமணம் கமழும் புத்தாண்டு மலர்

தமிழ் மக்களின் புத்தாண்டுத் திருநாளன்று, தமிழ் மக்களுக்குக் "கல்கி" ஒரு பரிசளிக்கப் போகிறது.

நிகழும் தமிழாண்டில் சாந்தியும் சுபிட்சமும் சேர்ந்து நிகழும் ஒளி மிகுந்த பாதையில் தமிழகத்துப் பெரு மக்கள் ஏறு நடை போட்டுச் செல்லக் "கல்கி" உறுதுணையாக நின்று வழி காட்டி வந்திருக்கிறது.

இதுபோலவே அடுத்த தமிழ் ஆண்டிலும் சாந்தியும் சுபிட்சமும் சேர்ந்து நிகழும் தமிழ் மக்களின் வாழ்க்கையில் மகிழ்ச்சி பொங்குவதற்கும் கலைமணம் கமழ்வதற்கும் 'கல்கி' தொண்டாற்றும். அதற்கு முதல்படியாகத் தமிழ்ப் புத்தாண்டை ஒட்டி வெளிவரும் ஏப்ரல் 15உ 'கல்கி' இதழைப் புத்தாண்டு மலராகவே வெளியிட்டுத் தமிழ் மக்களுக்குப் பரிசளிக்கப் போகிறோம் என்பதைப் பெருமிதத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

சுமார் நூற்று இருபது பக்கங்கள் கொண்ட 'கல்கி' புத்தாண்டு மலர் தமிழ் நாட்டின் தலைவர்கள், தலைசிறந்த எழுத்தாளர்கள் ஆகியவர்களின் கதைகள், கட்டுரைகள் முதலியவற்றுடன் கவிதைச் சித்திர மடல்களையும் தாங்கி மணம் வீசித் திகழும்.

ஆசிரியர் சோமு அவர்கள் எழுதும் "கடல் கண்ட கனவு" என்னும் சரித்திரத் தொடர் கதை புத்தாண்டு மலரில் ஆரம்பமாகிறது. நமது செந்தமிழ் நாட்டைச் சேர, சோழ, பாண்டியர்கள் ஆண்ட பொற்காலத்தின் பல முக்கியமான சம்பவங்களைப் பின்னணியாகக் கொண்டு ஆசிரியர் சோமு இந்தப் புதிய சரித்திரத் தொடர்கதையை எழுதுகிறார்.

வழக்கமாக வரும் எல்லாச் சிறந்த அம்சங்களுடன் இன்னும் பல விசேஷ அம்சங்களையும் தாங்கி வெளிவரும். இந்தக் 'கல்கி'ப் புத்தாண்டு மலரின் விலை நாலு அணாதான் என்பதை மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்கிறோம்.

__அட்டைப் படம்__

## அமரதாரா

லண்டன் நகரிலிருந்து ரங்கதுரை தாய்நாடு திரும்பி வரும் காட்சியையும், அப்போதுள்ள சூழ்நிலைகளையும் இந்த இதழ் அட்டை அலங்கரிக்கிறது.

# என்ன சேதி?

## பி. ஸி. ஜிக்குப் பலி

சில நாட்களுக்கு முன்பு கூனூர் பள்ளியில் படித்துக்கொண்டிருந்த பாளி பீட்டர்ஸ் என்ற சிறுமிக்கு பி. ஸி. ஜி ஊசி குத்தப்பட்டது. அதன் விளைவாக அப்பெண் தன் கண் பார்வை யிழந்து இமைகள் மூடிய வண்ணமாகவே இருக்கிறாள் என்று அந்தப் பெண்ணின் தாயார் ராஜாஜிக்கு எழுதியிருந்த செய்தி நேயர்களுக்குத் தெரியும். அப்பெண் இப்பொழுது சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வருகிறாள். அந்தப் பெண்ணின் போட்டோப் படம் ஒன்றை ராஜாஜிக்கு அனுப்பி யிருக்கிறார் அப்பெண்ணின் தாயார்.

பி. ஸி. ஜி தமிழ்ப் புஸ்தகம் 38ம் பக்கத்தில் கே. பாலசுப்பிரமணியன் என்ற செங்கல்பட்டு சிறுவனைப் பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதாவது கே. பாலசுப்பிரமண்யன் என்ற பதினெட்டு வயதுச் சிறுவன் செங்கல்பட்டில் நான்காவது படிவத்தில் சென்ற ஆண்டு படித்துக் கொண்டிருந்தான். அப்போது பி. ஸி. ஜி ஊசி குத்தப்பட்டது. அன்றைய தினத்திலிருந்தே பையனின் தேகநிலை சீர்கெட்டு வந்தது. அடிக்கடி வாந்தியும் மயக்கமும், கடும் தலைவலியுமாக அவதிப்பட்டு வந்தான். கண் பார்வை மங்கத் தொடங்கியது. பேசும் சக்தியும் இழந்து வந்தான். பெற்றோர்களின் ஒரே புதல்வன். பெற்றோர்கள் மிகவும் கவலைப்பட்டு, சிகிச்சைக்காக ஜுலை 3-ம் தேதி சர்க்கார் ஆஸ்பத்திரியில் சேர்த்தனர். சர்க்கார் ஆஸ்பத்திரி டாக்டர்கள், பையனின் தேக நிலையையும் மற்ற அறிகுறிகளையும் கண்டு, "மூளை நோய்" (Brain Tumour) என்று முடிவு செய்து ஆபரேஷன் செய்தனர். ஆபரேஷன் செய்த அன்றே மார்ச்சு முதல் தேதி பையன் இறந்து விட்டான்.

மூளை நோய் என்று எந்த அறிகுறிகள் கண்டு தீர்மானித்தார்களோ, அவை யாவும் பி. ஸி. ஜியினால் விளைந்த கோளாறுகள் என்று ராஜாஜி உறுதியாக நம்புகிறார்.

## பி. ஸி. ஜியும் டாக்டர்களும்

பிரிட்டனைச் சேர்ந்த பதினேழு டாக்டர்கள், இந்தியக் குழந்தைகள்மீது கருணை கொண்டு, பி. ஸி. ஜியைப் பற்றித் தங்கள் கருத்துக்களை ஒரு யாதாஸ்தாகத் தயாரித்து நமது ஜனாதிபதி ராஜன்பாபுவுக்குத் தாங்களாகவே அனுப்பி யிருக்கிறார்கள். அதில் இந்தியக் குழந்தைகளுக்கு பி. ஸி. ஜி ஊசி குத்துவதைப் பற்றிப் பார்த பார்லிமெண்டு அங்கத்தினர்களை நன்கு ஆலோசித்து ஒரு முடிவுக்கு வரும்படி கோரி யிருக்கிறார்கள். அவர்கள் பி. ஸி. ஜியைப் பற்றிக் கீழ்க்கண்ட விஷயங்களை முக்கியமாகக் குறிப்பிட்டிருக்கின்றனர்.

பி. ஸி. ஜி தோன்றிய நாள்முதல் இன்று வரை ஆராய்ச்சிகள் நடந்து கொண்டுதான் இருக்கின்றன. இத்தனை ஆராய்ச்சிகளுக்குப் பின்னும், டூபெர்குலின் பரிசோதனையினாலும் பி. ஸி. ஜி ஊசி குத்துவதாலும் யாதாகிலும் பயனுண்டா என்பது யாருக்கும் நிச்சயமாகத் தெரியவில்லை. நிச்சயமாக, திட்ட வட்டமாக பி. ஸி. ஜியைப் பற்றித் தகவல்கள் கிடைப்பதற்கு முன்னதாகவே பாரதத்திலும் பி. ஸி. ஜி பெருவாரியாகக் குத்தத் தொடங்கி யிருப்பது வருந்தத்தக்க விஷயம். பி. ஸி. ஜி யினால் விளையும் பயன்கள் என்னவென்று விஞ்ஞான ரீதியில் ஆராய்ச்சிகள் நடக்கவே இல்லை. பி. ஸி. ஜி க்ஷய நோயைத் தடுக்கும் என்பதற்கு ஆதாரங்கள் எங்குமே இல்லை. பி. ஸி. ஜி க்ஷயத்தைத் தடுப்பதற்குப் பதில் க்ஷயத்தை உண்டாக்கத்தான் செய்கிறது. டூபெர்குலின் சோதனை சருமத்தின் கோபத்தைத்தான் காட்டுகிறதே தவிர வேறு விசேஷ பயன் அதில் இல்லை. பி. ஸி. ஜி பெருவாரியாக உபயோகிக்கப்படாத பல தேசங்களில் பல பகுதிகளில் டி. பி. நோய் பெருமளவு குறைந்திருக்கிறது. பி. ஸி. ஜி தேக ஆரோக்கியத்தைக் கெடுக்கிறது; ஏன், உயிரையும் பறித்திருக்கிறது. டி. பி. நோய் பொது சுகாதார முறைகளினால்தான் தடுக்கப்பட்டிருக்கிறதே தவிர, ஊசிக் குத்துகளினால் அல்ல.

இவ்வாறு அவர்கள் சிறிதும் சந்தேகத்துக்கிடமின்றிக் கூறியிருக்கிறார்கள். அந்த யாதாஸ்தில் கையெழுத்திட்டுள்ள டாக்டர்களின் பெயர்களையும் யோக்கியதாம்சங்களையும் கீழே தந்திருக்கிறோம்.

எம். பெட்டே பெய்லீ M.R.C.S. L.R.C.P.
பெர்ட்ராண்டு ஆலின்ஸன் M.R.C.S., L.R.C.P.
ஆக்னஸ் சவுட்கோர்ட் ஆல்வால்டு M.B. (Lond.)., D.P.H., D.O.M.S. (Cantob)
ஹெக்டர் டபிள்யு. ஜார்டன் M.B., B.Ch.
எட்வர்டு மூர் M.B., B.Ch.
டௌகலஸ் லாட்டே M.B., Ch.B.D.Obst. R.C.O.G., M.R.C.O.G.

ஆசிரியர்

# சோமு

எழுதும்



மணியம்

சரித்திரத் தொடர்கதை

# கடல் கண்ட கனவு

ஏப்ரல் 15-ல் கல்கி

தமிழ்ப் புத்தாண்டு மலரில் ஆரம்பமாகிறது

ஜேம்ஸ் பர்னட் L.L.B., M.D. (ED), M.A., Ch.B., F.R.C.S. (ED)

ஸிரில் வி. பிங்க் M.R.C.S., L.R.C.P. (Captain Late R.A.M.C.)

எச். டியூடர் எட்மண்ட்ஸ் M.B., M.R.C.S., L.R.C.P.

மார்தா க்ளீலண்ட் B.SC., M.B., Ch.B.

டொனுல்ட் எஸ். மாரிஸ் M.B.B.S.

ஜே. வி. ஸ்வான் பெர்க் M.B., B.Ch. M.Ch.

ஜேம்ஸ் ஹாச்ஸ்லீ M.B.B.S.

கார்டன் வாட்டோ M.B., B.Ch.

டபிள்யூ. ஹெரால்டு எம்ஸ்லீ, M.B., Ch.B.

பி. டி. காபூர், M.A., B.Sc. (Hons.) M. B. Ch. B.

ஆண்ட்ரூ கோஸ்ட், L.R.C.P., L.R.C.S., L.R.F.P.S.

இத்தகைய பிரபல டாக்டர்கள் எச்சரிக்கை செய்தும் இந்திய சுகாதார மந்திரிக்கு விவேகம் வந்ததாகத் தெரியவில்லை.

## வரவேற்கிறோம்

கடந்த பல ஆண்டுகளாக லோக சபையின் அக்ராசன பீடத்தை அலங்கரித்து வந்த சபாநாயகர் ஸ்ரீ மவ்லங்கரின் மறைவு காரணமாக மேற்படி பதவிக்கு ஸ்ரீ அனந்தசயனம் ஐயங்கார் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

ஸ்ரீ அனந்தசயனம் ஐயங்கார் அப் பதவிக்கு இயற்கையாக வரவேண்டிய தலைவர்.



கடந்த இருபது வருஷ காலமாக அவர் சட்ட சபையில் இடையருப் பணியாற்றிப் பெரும் சேவை செய்திருக்கிறார்.

1948-ம் ஆண்டில் அரசியல் நிர்ணய சபை மத்ய சட்டசபையாக வேலை செய்தபோது ஸ்ரீ அனந்தசயனம் ஐயங்கார் உதவி சபாநாயகராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். அன்று முதல் இன்று வரை உதவி சபாநாயகர் பதவியைத் திறம்பட வகித்துத் தொண்டாற்றி எல்லாக் கட்சியினரின் நன்மதிப்பையும் பெற்றவர்.

சட்டசபை விவகாரங்களில் ஆழ்ந்த அநுபவமும் ஆற்றலும் வாய்க்கப் பெற்ற ஸ்ரீ ஐயங்கார் இப்போது சபாநாயகராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதைப் பற்றி நேருஜி பாராட்டி மகிழ்ந்ததில் வியப்பொன்றுமில்லை. பதவிக்கு முற்றிலும் தகுதி வாய்ந்த அவருடைய நியமனத்தை வரவேற்கிறோம்.

## நெய்வேலி அபிவிருத்தி

"பெற்றதாயும் பிறந்த பொன்னுடும்
நற்றவ வானிலும் நனிசிறந்தனவே"

என்று வலியுறுத்தி, "பிறந்த பொன்னுட்டைத் தாயாக, அமிர்தத்தை விட இனிமை மிக்கதாக, சுவர்க்கம் என்று அழைக்கப்படும் சுகபோக இன்பத்திலும் மேலானதாகப் போற்றுவோம்" என்று பாரதியார் உரைத்த மணி மொழிகளைத் தமிழ் மக்கள் உணர ஆரம்பித்து விட்டார்கள்.

தமிழ்நாடு உழவிலும் தொழிலிலும் உயர்ந்து, கல்வியில் சிறந்து, கலைகள் பல மலர்ந்து, சகல விதத்திலும் சிறப்புற்று விளங்கும் தாயகமாகத் தழைக்க, தங்கள் அறிவாற்றல் அனைத்தையும் ஈடுபடுத்தி உழைப்பதில் முயன்று விட்டார்கள்.

தமிழ் மக்களின் முயற்சி பலன் அளிக்க ஆரம்பித்து விட்டது. நெய்வேலியில் அவர்கள் ஆரம்பித்த காரியத்தில் அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறது. தென்னுற்காடு மாவட்டத்தைப் பொன்னுற்காடாக மாற்றப் போகும் நெய்வேலித் திட்டத்தில் முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது என்ற செய்திகள் வந்து கொண்டிருக்கின்றன.

நமது கைத்தொழில் மந்திரி கனம் பக்தவத்ஸலம் இதைச் சட்ட சபையில் அறிவித்திருக்கிறார்.

நெய்வேலியில் பூமிக்கடியில் புதைந்து கிடக்கும் பழுப்பு நிலக்கரியை எடுக்க முடியாமல் தண்ணீர் ஊற்று ஓடிக் கொண்டிருக்கிறது என்பதை நேயர்கள் அறிவார்கள். அதன் அழுத்த சக்தியைக் குறைப்பதற்காகச் சென்ற மாதம் 29ல் நிமிஷத்துக்கு ஆயிரம் காலன் வீதம் தண்ணீரை இறைக்கும் பதினுறு பம்புகளை உபயோகப்படுத்த ஆரம்பித்தார்கள் அல்லவா? அது நல்ல பலன் கொடுத்திருக்கிறது என்ற செய்தியைத்தான் மந்திரி சட்டசபையில் தெரிவித்தார்.

ஒரு வாரத்துக்குள்ளாகவே சுமார் 110 அடி தண்ணீர் குறைந்துவிட்டது. இன்னும் இருநூறு அடி தண்ணீர் குறைந்துவிட்டால் எவ்வித இடைஞ்சலும் இல்லாமல் நிலக்கரியை வெட்டி எடுக்க ஆரம்பித்துவிடலாம்.

தமிழ் மக்கள் விழித்துக் கொண்டார்கள். சோம்பலை மறந்து, பழம் பெருமையை எண்ணி ஏங்கிக் கொண்டிருக்காமல் உழைக்க ஆரம்பித்து விட்டார்கள் என்பதைத் தெரிந்து கொண்டாள் தமிழ்த் தாய். அந்த மகிழ்ச்சியில் தன் மடியில் உள்ளபொருள் அனைத்தும் தரப்போகிறுள்.

## ரசிகமணி நினைவு விழா

'குற்றால முனிவர்' என்றும், 'தமிழ் வளர்த்த பெரியார்' என்றும் தமிழ் மக்கள்

# IN SPRINGS—

## ஸ்பிரிங்குகளில் தரத்தை எவ்வாறு நிர்ணயிக்கிறீர்கள்?

## how do you measure Quality?




சந்தேகமின்றி, மட்டமான ரஸ்தாக்களிலும், ஓடும் வண்டிகளில் பளுச் சோதனைகள், ரஸ்தாப் பரீட்சைகள் நடத்தி தரத்தை நிரூபிப்பதுதான், தரத்தில் உயர்ந்த கனரா ஸ்பிரிங்குகளைத் தயாரிக்கும் கனரா ஒர்க்ஷாப்பில் இது வழக்கமாகச் செய்யப்படுவதுதான். மிக நேர்த்தியான தரமுள்ள எஃகு உலோகக் கலவையைக் கொண்டு நல்ல உறுதியும் வலிமையும் இருக்கும்படி சமீபகால விஞ்ஞான முறைகளின் கீழ் காய்ச்சி பதப்படுத்தப்படுவதாலும், தயாரிப்பின் ஒவ்வொரு நிலையிலும் தரம்குன்றாமல் கடுமையாக சோதிக்கப்படுவதாலும் கனரா ஸ்பிரிங்குகள் தரத்தின் சிகரமாக விளங்குகின்றன.

கொச்சி நீங்கலாக தென்னிந்தியாவுக்கு ஏகபோக விநியோகஸ்தர்கள்:

**டி. வி. சுந்தரம் அய்யங்கார் அண்டு சன்ஸ், லிமிடெட்**
மதுரை & கிளைகள்

**சுந்தரம் மோட்டார்ஸ் லிமிடெட்**
மதராஸ்-6

**மதராஸ் ஆட்டோ சர்வீஸ் லிமிடெட்**
மதராஸ் & பெங்களூர்

# மகாமகத்தில் அன்னதானம்!



அன்னதான சிவன் சங்கத்தார் தமிழ் நாட்டில் செய்து வரும் தொண்டு தமிழ்ப் பெரு மக்கள் எல்லாரும் அறிந்ததே. அவர்கள் ஏழை எளிய மக்களுக்கு அன்னதானம் வழங்கியும், அனாதைக் குழந்தைகளை எடுத்து ஆதரிப்பதற்காகக் கும்பகோணத்துக்கு அருகில் உள்ள அம்மா சத்திரத்தில் ஒரு அனாதை மாணவர் இல்லம் நடத்தி வருவதும் பிரசித்தமானது. அத்துடன் இல்லாமல் எங்கெல்லாம் திருவிழாக்கள் நடந்தாலும், கோயில் கும்பாபிஷேகம் நடந்தாலும் அங்கு சென்று விழாவுக்கு வரும் மக்களுக்கு அன்னதானம் செய்யும் தொண்டில் ஈடுபட்டு வருகிறது. சென்ற ஆண்டு சிதம்பரம் நடராஜர் கோயில் கும்பாபிஷேகத்தின்போது அங்கு வந்த ஆயிரக்கணக்கான மக்களுக்கு அன்னம் வழங்கியது. சமீபத்தில் கும்பகோணத்தில் நடந்த மகாமகத்துக்கு வந்த லட்சக்கணக்கான மக்களின் பசியைப் போக்க அரும்பணி ஆற்றியது. சுமார் ஒரு லட்சம் மக்களுக்கு அதாவது நாறாயிரம் பேருக்குச் சுகாதார சுத்தமான சாப்பாடு போடும் திருப்பணியை மேற் கொண்டு வெற்றிகரமாக நடத்தியிருக்கிறது. இத்தமாதிரி ஏழை எளிய மக்களுக்கு அன்னமிடும் திருப்பணியை மேற்கொண்டு உழைத்து வரும் அன்னதான சிவன் சங்கத்துக்குத் தமிழ்ப் பெருமக்கள் உதவ வேண்டு மென்று கேட்டுக் கொள்கிறோம்.

கும்பகோணம் மகாமகத் திருவிழாவில் கலந்து கொண்ட மக்களுக்கு அன்னதான சிவன் சங்கம் உணவு வழங்கும் திருப்பணியைத் துவக்கி வைப்பதற்காக நமது முதன் மந்திரி காமராஜர் செல்லும்போது, சாரணர்கள் அணிவகுத்து மரியாதை செய்யும் காட்சியையும், சுமார் நாறாயிரம் பேருக்குச் சாதம் சமைக்கும் வசதியுள்ள குக்கர் பாத்திரங்களையும் படக்கில் காணலாம்.

---

அன்புடன் போற்றி வந்த ரசிகமணி டி. கே. சி. அவர்கள் தமது இறுதிக் காலத்தில் திருக்குற்றாலத்திலிருந்து தமிழ் வளர்த்து வந்தார்கள். அவர்கள் மறைவுக்குப் பின் சில அன்பர்கள் 'ரசிகமணி டி. கே. சி. நினைவுக் கழகம்' என்று ஒரு கழகம் திருக்குற்றாலத்திலேயே நிறுவி ரசிகமணி செய்து வந்த பணியைத் தொடர்ந்து செய்யப் பல திட்டங்கள் வகுத்திருக்கிறார்கள். அந்த டி. கே. சி. நினைவுக் கழகத்தினர் 18-3-56 ஞாயிற்றுக்கிழமை ரசிகமணியின் நினைவு விழாவைச் சிறப்பாகக் கொண்டாடப் போகிறார்கள். 'கல்கி' ஆசிரியர் திரு சோமு அவர்கள் விழாவுக்குத் தலைமை தாங்குகிறார். திரு ஐ. ஏ. சிதம்பரம் பிள்ளை வரவேற்புரை நிகழ்த்துகிறார். ரசிக மணியின் திருவுருவப் படத்தைத் திரு ஏ. வி. பால்நாடார் அவர்கள் திறந்து வைக்கிறார். திருவாளர்கள் எஸ். மகராஜன், கு. அருணாசலக் கவுண்டர், வீர. சிவசுப்பிரமணியம், நா. லட்சுமணப் பெருமான், ல. சண்முகசுந்தரம், எம். கே. ராமய்யங்கார் முதலியவர்கள் விழாவில் கலந்து கொண்டு சொற்பொழி வாற்றுகிறார்கள்.

## உற்ற நண்பன்



# ferrania

## பெரானியா

போட்டோ சாமான்கள் மிகச் சிறந்தது—கலர், மற்றும் சாதா படங்களை — உயர் ரக முறையில் தத்ரூபமாக எடுக்கும் பிலிம்களும், பிளேட்டுகளும் பேப்பர்களும் மற்றும் காமிராக்கள்.

### Elioflex 2



- 7.5 cm. F/6.3 கலர் கரெக்டெட் கோடெட் டிரிபின் அனஸ்டிக்மாடிக் லென்ஸ் பொருத்தப்பட்டது.
- பிளாஷுடன் பெரானியா "ஸ்பெஷல்" காமிராவின் ஷட்டர் ஸ்பீடு செகண்டுக்கு 1/25 முதல் 1/200.
- சிப்ளெக்ஸ் பிரர்டைப் மற்றும் ஸ்போர்ட்ஸ் வியூபைண்டர் கொண்டது.
- ஒரு கருள் பிலிமுடன் ரூ. 95தான்.
- எல்லா பிரபல போட்டோ டீலர்களிடமும் கிடைக்கும்

டானிட், ராண்டைன், ஐபிஸ், மற்றும் ஆஸ்டர் காமிராக்களும் கிடைக்கும்

**AMA LIMITED**
BOMBAY 1: Canara Bldg., Hornby Road,
CALCUTTA: 11, Government Place East
NEW DELHI: Plaza Bldg., Connaught Pl.
MADRAS: 159, Mount Road

F - 6



## புதுமையும் நறுமணமும்

மேலும் மேலும் நீடித்திருக்கச் செய்கிறது





ஆப்கன் டால்கம் பவுடர்

படான்வாலா

டாய்லெட் பவுடர்





# சுந்தரியின் சுயம்வரம்

ஸோமாஸ்

உற்றார் உறவினர் இல்லாத சாம்பசிவத்துக்கு யாரும் பெண் கொடுக்க முன்வரவில்லை. தொண்ணூறு ரூபாய் சம்பளத்தில் ஒரு ஆபீஸில் பியூன்வேலை பார்த்து வந்தான் சாம்பசிவம். வயது முதிர்ந்த அவன் தாயார் தள்ளாத நிலையில் அவனுக்கு ஏதோ சமைத்துப் போட்டு வந்தாள். அத்துடன் அவனைச் சீக்கிரம் கல்யாணம் பண்ணிக் கொள்ளச் சொல்லி நச்சரித்து வந்தாள்.

சாம்பசிவத்தின் தாயாருக்கு முதுமை காரணமாக எந்தக் காரியத்திலும் நிதானம் தவறி விடும். அதன் பலன் முழுவதையும் சாம்பசிவம் அநுபவிக்க நேர்ந்தது. மற்றக் காரியங்களில் அம்மா நிதானம் தவறிச் செய்த தவறுகளைச் சாம்பசிவம் அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை. தினந்தோறும் சமையலில் அவள் நிதானம் தவறினதுதான் அவனுக்குக் கஷ்டமாகப் போய் விட்டது.

ஒருநாள் குழம்பில் உப்பே இருக்காது. இன்னொரு நாள் ரஸத்தில் உப்பு இருக்காது; மற்றொரு நாள் சாதம் குழைந்து போய்க் கூழாகி விடும்—இப்படிப் பல கோளாறுகள். சாம்பசிவம் அம்மாவைக் கடிந்து கொள்ளவும் முடியாமல், அவள் சமையலைச் சாப்பிடவும் முடியாமல் தவிப்பான்.

"அம்மா, என் உத்தியோகத்துக்கு ஏற்றபடிதான் நீ சமையல் செய்திருக்கிறாய். நான் பார்க்கும் வேலைக்கு உப்பு தேவையில்லை. அதாவது உப்பு போட்டுக் கொண்டு சாப்பிடுகிறவன் என் வேலையைச் செய்ய மாட்டான். ஆனால் நாக்கு என்று ஒன்று இருக்கிறதே, அம்மா! அது நாம் சொன்னபடி கேட்க மாட்டேன் என்கிறதே!" என்று கூறுவான் சாம்பசிவம்.

"எனக்கு வயசாகி விட்டது. எத்தனை நாளைக்கு என்னால் உழைக்க முடியும்! நீ ஒரு பெண்ணுக்குத் தாலி கட்டி அழைத்து வந்து விட்டாயானால், அப்புறம் அவள்பாடு, உன்பாடு. அவள் எப்படிச் சமைத்துப் போட்டாலும் உனக்கு நன்றாயிருக்கும். என்னைக் குறை சொல்லுவதில் என்ன பிரயோஜனம்!" என்று அவன் தாயார் அடிக்கடி சொல்லுவாள்.

தனது குறைந்த சம்பளத்தில் கல்யாணம் செய்து கொண்டு குடித்தனம் நடத்த முடியும் என்று சாம்பசிவத்துக்கு நம்பிக்கையில்லாததினால் அவன் இதுவரையில் தன் கல்யாணத்தைப் பற்றிச் சிந்திக்கவேயில்லை. இப்பொழுது தீவிரமாக அதைப் பற்றிச் சிந்திக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிட்டது.

சாம்பசிவம் குடியிருந்த வீட்டுக்குச் சமீபத்திலேயே ஒரு சோதிடர் இருந்தார். அவர் இருந்த இடம் மிகவும் சிறியது. அங்கே ஒரு பாயைக் கீழே விரித்து அதன்மேல் ஒரு சாய்வு நாற்காலியைப் போட்டுக் கொண்டு அக்கிழவர் உட்கார்ந்திருந்தார். மங்கிப்போன பழங் காலத்துப் புத்தகங்கள் சில, ஒரு இங்கிப்புட்டி, பேனா, ஒரு பொடி டப்பி, வெள்ளி பிரேம் போட்ட பருமனான மூக்குக் கண்ணாடி—இவைகள்தான் அந்தச் சோதிடரின் ஸ்தாவர ஜங்கம சொத்துக்கள். இவை தவிர அவருக்கு வேறு மனிதர்களோ, வீடோ, வாசலோ எதுவும் இருப்பதாக யாருக்கும் தெரியாது.

சோதிடர் காலை எட்டுமணி சுமாருக்கு வந்து தமது குடிலைத் திறப்பார். பக்கத்திலிருந்த ஆப்பக்காரக் கிழவியிடம் ஆப்பம் வாங்கிச் சாப்பிட்டுத் தம் சிற்றுண்டியை முடித்துக் கொள்ளுவார். கட்டுக் கட்டாக விபூதி அவர் திருமேனியை அலங்கரிக்கும். தலை தும்பைப் பூமாதிரி நரைத்திருக்கும். அந்தப் பக்கத்து மக்களெல்லாம் அவரிடம் மிகவும் மதிப்பும் மரியாதையும் வைத்திருந்தனர் என்பதற்கு அத்தாட்சியாக அவரது அறையில் சதா இரண்டொருவர் இருந்து கொண்டே இருப்பார்கள்.

"கேளப்பா குரு பலன்தான்
கூடிவிட்டால்
கூறும் ஒரு வார்த்தையினில்
குறி தப்பாது......"

என்று கணீரென்ற குரலில் சோதிடர் பாட்டுச் சொல்லுவார். சோதிடம் கேட்க வந்தவர்கள் மிகவும் பக்தி சிரத்தையுடன் அவர் முகத்தைப் பார்த்தபடி கையைக் கட்டிக் கொண்டு கேட்பார்கள். பாட்டு முடிந்ததும் மூக்குக் கண்ணாடியை ஒரு முறை தள்ளி விட்டுக் கொண்டு பாட்டை விரித்து உரைக்க ஆரம்பிப்பார்.

சாம்பசிவத்துக்குச் சட்டென்று அந்தச் சோதிடரின் நினைப்பு வந்தது. அவரிடம் தன் கல்யாணத்தைப் பற்றிச் சோதிடம் கேட்டால் என்ன என்ற அபூர்வ யோசனையும் உதித்தது.

அவனுக்கு விடுமுறை நாளான ஞாயிற்றுக் கிழமை யன்று காலையில் சோதிடரின் சிறு குடிலுக்குப் போய்ச் சேர்ந்தான்.

சோதிடர் அவனைப் பூர்வாங்கமாகக் கேட்க வேண்டிய கேள்விகளை யெல்லாம் கேட்டு நிலைமையை அறிந்து கொண்டார். சாம்பசிவம் தான் பிறந்த தேதி, மாதம், கிழமை, வருஷம் ஆகியவற்றை யெல்லாம் சொன்னான். சோதிடர் கணக்குப் போட்டு, விரல் விட்டு எண்ணி, சில பாடல்களையும் சொன்னார்.



"அப்பா, சாம்பசிவம்! இந்த ஜாதகனுக்கு விவாகம் விரைவிலேயே நடக்கும். நல்ல அழகான பெண்ணாகக் கிடைப்பாள். ஆனால்..."

"......ஆனால் என்ன சுவாமி!" என்று மிகவும் கலவரத்துடன் கேட்டான் சாம்பசிவம்.

"அதைச் சொல்லுகிறேன். உன் கல்யாணத்துக்குக் குறுக்கே ஒரு கிழவர், பெண்ணின் தாத்தா—தடையாக நிற்பார். நீ எப்படியாவது அவரைச் சமாளித்து விட்டாயானால், கல்யாணம் சுலபமாக நடந்து விடும்......" என்று சோதிடர் சொன்னார். சாம்பசிவம் அவருக்குச் செலுத்த வேண்டிய கட்டணத்தைச் செலுத்தி விட்டு வீட்டுக்குப் போனான்.

அன்றைய தினத்திலிருந்து அவன் போக்கே அடியோடு மாறி விட்டது. ஒருநாள் கூட விடுமுறை கேட்காத சாம்பசிவம் இப்பொழுதெல்லாம் கால் நாள், அரை நாள், முழுநாள் — என்று அடிக்கடி லீவு போடலானான். ஒழுங்காக வேலை பார்த்து வந்து நல்ல பெயர் எடுத்திருந்தபடியினால் அடிக்கடி அவனுக்கு லீவு கிடைப்பது சுலபமாயிருந்தது.

சாம்பசிவத்துக்கு லீவு கிடைப்பதுதான் சுலபமாயிருந்ததே தவிர, பெண் கிடைப்பது அவ்வளவு சுலபமாயில்லை. மேலும், அவனுக்குப் பெண் மாத்திரம்தான் வேண்டும் என்றால் கிடைத்திருக்கும்; பெண்ணோடு கூட ஒரு கிழவரையும் சேர்த்துத் தேடியபடியினால் சிரமமாயிருந்தது.

"உங்கள் பெண்ணுக்குத் தாத்தா இருக்கிறாரா!" என்று சாம்பசிவம் முதல் கேள்வியை ஆரம்பித்ததுமே அனேகம் பேர்கள் "இல்லை" என்று கூறிக் கொண்டே பின்வாங்கினர்.

"பெண்ணின் தாத்தா அவன் விவாகத்துக்குக் குறுக்கே நிற்கிறாரா!" என்ற சாம்பசிவத்தின் இரண்டாவது கேள்வியும் பலரைத் திணற அடித்தது.

சாம்பசிவம் அவர்களுக்கெல்லாம் சோதிடர் சொன்னதைக் கூறினான். சாம்பசிவத்துக்குச் சோதிடர் கூறினார் என்பதற்காக எந்தத் தாத்தாவும் தம் பேத்தியின் விவாகத்துக்குக் குறுக்கே நிற்க விரும்பவில்லை.

ஒருநாள், சாம்பசிவம் வழக்கம் போல், வேலைக்குப் புறப்பட்டான். அவன் தாயாரும் வழக்கம்போல் அவனது விவாகத்தைப் பற்றி வற்புறுத்தினாள். சைக்கிளில் ஏறி அமர்ந்து உந்திய சாம்பசிவத்தின் மனமும் சிந்தனையில் ஒரு உந்து உந்தித்தள்ளி முன்னேறியது. இவ்வளவு பெரிய ஊரில் தனக்கு ஒரு பெண் கிடைக்காமல் இருக்கும் அதிசயத்தை எண்ணியபடி சைக்கிளை வேகமாக மிதித்தான்.

பெரம்பூரை அடுத்த வியாசர்பாடியில்தான் சாம்பசிவம் வசித்து வந்தான். அங்கிருந்து அவன் வேலை பார்த்து வந்த கம்பெனிக்கு ஏழு மைல்கள் சைக்கிளில் போக வேண்டும். இதை அவன் ஒரு சிரமமாகவே நினைக்கவில்லை.

சுமார் ஒரு மைல் சைக்கிள் போயிருக்கும். சைக்கிளுக்கு எதிர்ப்பக்கமாக ஒரு பெண்மணி ஓடிவந்து சைக்கிளை நிறுத்தும்படி கையை ஆட்டினாள். சாம்பசிவம் அவளருகில் சென்று சைக்கிளிலிருந்து கீழே இறங்கினான்.

"............ஒரு உதவி செய்ய முடியுமா!" என்று திக்கிக்கும் குரலில் கேட்டாள் அவள்.

சாம்பசிவத்துக்கு உடம்பெல்லாம் புல்லரித்தது. இவ்வளவு களையும் வனப்பும் வாய்ந்த பெண் திலகத்தை அவன் பார்த்ததேயில்லை. பிறைமதியைப் பழிக்கும் நெற்றி, அந்த நெற்றியின் அழகை எடுத்துக் காட்டும் சிவப்புச் சாந்துத் திலகம், அந்தத் திலகத்தையும் நெற்றியையும் விளக்கிக் காட்டும் வில்லொத்த புருவங்கள், பேசும் கரிய பெரிய விழிகள், எடுப்பான நாசி இவ்வளவும் கொண்டு அஜந்தா ஓவியம்மாதிரி ஓர் அழகி அவனெதிரே நின்றாள்.

"என்ன மெய்மறந்து நின்று விட்டீர்களே! இந்த ஏழைப் பெண்ணுக்கு உதவி செய்ய மாட்டீர்களா!" என்று அவள் கேட்டதும், சாம்பசிவம் பிரமை நீங்கி, இதுகாறும் அவன் உலவிய கந்தர்வ லோகத்திலிருந்து பூவுலகத்துக்கு வந்து சேர்ந்தான். கெஞ்சும் அவள் பார்வையில் அவன் நெஞ்சம் குழைந்தது.

"நீ...நீ...யார்! என்னை என்ன கேட்கிறாய்!" என்று தடுமாறிக் கேட்டான் சாம்பசிவம்.

'கல கல'வென்று அவள் இன்னிசைநாதம் போல், தன் முல்லைப்பல் தெரியச் சிரித்தாள்.

"உங்களை ஒரு உதவி கேட்டேன். முடியாவிட்டால் வேண்டாம்! என்று முகவாட்டத்துடன் மொழிந்தாள் அவள்.

சாம்பசிவம் பதறிப் போனான்.



அன்றையதினம் சாம்பசிவத்துக்குச் சைக்கிள் பிரயாணம் புஷ்பக விமானத்தில் பறப்பது போல் இருந்தது. உணர்ச்சி பரவசமாகி விட்ட சாம்பசிவத்துக்குச் சுந்தரியிடம் ஒன்றும் பேசத் தோன்றவில்லை.

"ஐயா, ஐயா! தபால் ஆபீஸைத் தாண்டி இவ்வளவு தூரம் வந்து விட்டீர்களே!" என்று கூறிக் கொண்டே சுந்தரி ஓடும் சைக்கிளிலிருந்து லாகவமாகக் கீழே குதித்தாள். சாம்பசிவமும் சைக்கிளிலிருந்து இறங்கினான்.

"சுந்தரி, ஓடும் சைக்கிளிலிருந்து இப்படிக் குதிக்கலாமா!" என்று சொல்லி விட்டு சைக்கிளைத் தள்ளியபடி சுந்தரியைப்பின்தொடர்ந்தான்.

தபாலாபீசு நெருங்கியதும் சுந்தரி அவனை விட்டுப் பிரிந்து பரபரப்புடன் தந்தி இலாக்காவை நோக்கி ஓடினாள்.

சாம்பசிவம் அவள் வரும்வரையில் தபால் ஆபீஸ் வாசலில் சைக்கிளோடு நின்றான்.

சுந்தரி, சில நிமிஷங்களில் திரும்பி வந்தாள்.

"சுந்தரி, தந்தியா கொடுத்தாய்! யாருக்கு!" என்று கேட்டான் சாம்பசிவம் திகிலுடன்.

"என் மாமாவுக்குத் தந்தி கொடுத்தேன்!"

"மாமாவுக்கா .........! என்ன சமாசாரம்!"

"என் பாட்டிக்கு உடம்பு சரியில்லை. செங்கல்பட்டில் இருக்கும் மாமாவுக்குத் தந்தி கொடுத்தேன்" என்றாள் சுந்தரி.

"சுந்தரி, என்ன சொன்னாய்! அதற்குள் அவ்வளவு கோபமா!..."

"அட, என் பெயர் கூட உங்களுக்குத் தெரிந்திருக்கிறதே......!" என்று கூறிச் சுந்தரி வியப்பினால் விரிந்த விழிகளால் சாம்பசிவத்தை விழுங்கி விடுவதுபோல் பார்த்தாள்.

"சுந்தரி, இணையிடற்ற அழகியான உன் பெயர் சுந்தரியாயிராமல் வேறு என்னவாயிருக்க முடியும்!" என்று கேட்டு விட்டுச் சாம்பசிவம் 'கல கல' வென்று நகைத்தான்.

"சரி, சரி. சிரிக்கும் தருணம் அல்ல இது. சீறி எழ வேண்டிய தருணம். ரொம்ப அவசரம்! என்னை உங்கள் சைக்கிளின் பின்புற ஆசனத்தில் ஏற்றிக் கொண்டு போய்ப் பெரம்பூர் தபால் ஆபீஸில் விட்டு விட வேண்டும்!" என்று கூறிவிட்டு அவன் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள். அவன் கண்கள் அவள் பார்வையில் கட்டுண்டுநின்றன. உடனே அவள் சைக்கிளின் பின்புறத்தை நெருங்கினாள். மறு நிமிஷம் யந்திரம் மாதிரி சாம்பசிவம் சைக்கிளில் ஏறி உட்கார்ந்து ஒரு மிதி மிதித்தான். சுந்தரியும் சைக்கிளின் பின்புறத்து ஆசனத்தில் பாய்ந்து ஏறி லாகவமாக உட்கார்ந்து கொண்டாள்.

"சுந்தரி, நீ எப்படி உன்......மாமாவுக்குத் தந்தி கொடுத்தாய்......!"

"ஏன், அதில் என்ன ஆச்சரியம்! தந்திக் குமாஸ்தாவிடம் விஷயத்தைச் சொன்னால் அவர் தந்தி கொடுத்து விட்டுப் போகிறார்!" என்றாள் சுந்தரி அலட்சியமாக. அப்பொழுது அவள் புருவங்கள் துள்ளி நிமிர்ந்த அழகையும், கன்னங் குழிய அவள் சிரித்த சிரிப்பையும் பார்த்துச் சாம்பசிவம் சிலையாக நின்றான்.

"......உனக்குத் தாய், தகப்பன் எல்லோரும் இருக்கிறார்களா!" என்று அன்பு கனியும் குரலில் கேட்டான் சாம்பசிவம்.

"எனக்குத் தாயும் இல்லை, தகப்பனும் இல்லை!" என்றாள் சுந்தரி.

"ஐயோ, பாவம்! போகட்டும். உனக்கு ஒரு தாத்தாவாவது இருக்கிறாரா!" என்று அநுதாபத்தோடு கேட்டான் சாம்பசிவம்.

சுந்தரி 'களீர்' என்று சிரித்தாள். "என்னங்க, உங்கள் பேச்சு வேடிக்கையாயிருக்கிறதே! எல்லோரும் தாய் தகப்பனைப் பற்றி விசாரிப்பார்கள். நீங்கள் என்னடா வென்றால், தாத்தாவைப் பற்றிக் கூட விசாரிக்கிறீர்களே! என் தாத்தாவை உங்களுக்குத் தெரியுமா!" என்று கேட்டாள்.

"சுந்தரி......! உனக்கு......நிஜமாகவே...... தாத்தா இருக்கிறாரா!"

"நிஜமாகத்தான் தாத்தா இருக்கிறார். ஏன் அப்படிக் கேட்கிறீர்கள்!"

"சுந்தரி, அவர்......உன் ... தாத்தா, உன் கல்யாணத்துக்குக் குறுக்கே நிற்கிறாரா!"

"ஆமாம், ஆமாம். என் மாமா கொண்டு வந்த வரன் ஜாதகங்களைக்கூட என் தாத்தா பார்க்கவே இல்லை. 'சுந்தரியைத் தேடிக் கொண்டு வரன் தானே வருவான்!' என்று சொல்லி விட்டார்."

"ஆகா, சோதிடம் பொய்யாகுமா!"

"என்ன! நீங்கள் சோதிடம் பார்த்தீர்களா! யாருக்கு! என் தாத்தாகூடச் சோதிடம் பார்த்துத்தான் அப்படிச் சொன்னார்."

"...என்ன! உன் தாத்தா சோதிடரா! இன்றைக்கு அதிசயத்துக்கு மேல் அதிசயமாக நிகழ்ந்து கொண்டிருக்கிறதே! சுந்தரி, நேரம் ரொம்ப ஆகிவிட்டது. நான் வேலைக்குப் போக வேண்டும். நீ ஜாக்கிரதையாக வீட்டுக்குப் போ! நான் பிறகு உன்னைச் சந்திக்கிறேன்" என்று கூறிவிட்டு, சாம்பசிவம் சைக்கிளில் தாவி ஏறி மறைந்தான்.

சுந்தரியை மணந்து கொள்ளச் சாம்பசிவத்துக்குச் சிரமம் எதுவும் இருக்கவில்லை. சோதிடக் கிழவரின் பேத்திதானே சுந்தரி!

சுந்தரியின் தாத்தா, சோதிடக் கிழவர் பெண் பார்க்க வந்த சாம்பசிவத்தையும் அவன் தாயாரையும் வரவேற்று உபசரித்தபோது, சாம்பசிவத்துக்கு மகிழ்ச்சி நிலைகொள்ளவில்லை.

"அப்பா, சாம்பசிவம்! நான் மட்டும் எனக்கு ஒரு பேத்தி இருப்பதாகச் சொல்லியிருந்தால், அவளை மணக்கச் சம்மதித்திருக்க மாட்டாய். அதற்காகத்தான் பெண்ணின் தாத்தாவைப் பற்றி அப்படிச் சோதிடம் சொன்னேன். எனக்கு வெகு நாட்களாகச் சுந்தரியை உனக்குக் கொடுக்க வேண்டும் என்று ஆசை. உன் தாயாரைக் கேட்டதற்கு உன் பிடிவாத குணத்தைப் பற்றிச் சொன்னாள்!" என்றார் சோதிடக் கிழவர்.

சாம்பசிவம் பதில் பேச வில்லை. அவன் எப்படிப் பேச முடியும்! சுந்தரியிடம் அவன் பார்வை லயித்து விட்டதே!

# பனித்துளி

"ஒரு ஜோடி நீர் யானைகள் வாங்க ரூ 17,700-ஐ சென்னை நகர சபை மான்யம் அளித்திருக்கிறது." — செய்தி



**இவ்வளவு பணத்தைக் கொண்டு போய் ஜலத்தில் மூழ்க விடுகிறீர்களே!**

★

"மலையாளத்தில் தங்கம் கிடைப்பதற்கு வேண்டிய ஆதாரங்கள் கிடைத்திருக்கின்றன." — செய்தி

**ஆகவே மலையாளத்தை தட்சிணப் பிரதேசத்துடன் சேர்ப்பதற்குப் பொருளாதார ரீதியாக மற்றொரு ஆதாரம் கிடைத்திருக்கிறது.**

★

இந்தியாவுக்கும் அமெரிக்காவுக்கும் இடையே உள்ள கருத்து வேற்றுமைகளைப் போக்கும் பொருட்டு நேருஜியுடன் சம்பாஷணை செய்ய யு. எஸ். ராஜாங்க மந்திரி டல்லஸ் பாலம் விமான நிலையத்தில் வந்து இறங்கினார். — செய்தி

**டல்லஸின் விஜயம் இந்தியாவுக்கும் அமெரிக்காவுக்கும் உள்ள உறவை பலப்படுத்தும் பாலமாக அமையலாம்.**

"ரிக்ஷாக்களை ஒழித்து விட்டு ரிக்ஷாக்காரர்களுக்கு வர்த்தக ஸ்தாபனங்களில் வேலை தரும்படி கேட்டுக் கொள்ளப் போகிறோம்." — ஒரு மந்திரி

**இப்போது நடுத்தெருவில் ஓடிக் கொண்டிருப்பவர்கள் வேலை கிடைக்கா விட்டால் நடுத் தெருவில் நிற்க வேண்டி வரும்.**

★

"ஆபீஸ் நேரங்களில் ஜன நெரிசல் அதிகமாக இருப்பதால் பிரயாணிகள் பஸ் ஸ்டாண்டுகளில் கால் கடுக்க நிற்க வேண்டியிருக்கிறது. கொஞ்சம் அதிகப்படி பஸ்கள் போட்டால் இந்த அவஸ்தை போய்விடும்." — செய்தி

**ரொம்ப சரி. பஸ்ஸுக்குள் நிற்கும் பிரயாணிகளின் அவஸ்தை எப்போது போகும்?**

★

"கோவைக்கு அருகிலுள்ள மலைக்காடு ஒன்றில் ஒன்பது அடி நீளமுள்ள மலைப்



பாம்பு ஒன்றைத் தடியால் கொன்று வீழ்த்தினார்கள்." — செய்தி

**அது பட்ட அடி எத்தனையோ?**




# FAMOUS *throughout* INDIA



சரித்திரப் புகழ் பெற்ற மாளிகைகள் அழகாலும் நீடித்திருக்கும் தன்மையாலும் எவ்வாறு தனிச்சிறப்புடன் விளங்குகிறதோ அதேபோல் சென்ற 80 வருஷத்திற்கு மேலாக "வெஸ்ட் எண்ட்" கடிகாரங்கள் இந்தியாவில் குன்றாப் புகழுடன் இருந்து வருகிறது.

அதிக விலையானாலும் அல்லது குறைந்த விலையானாலும் சரி, மிக்க தொழில் அனுபவம் வாய்ந்தவர்களால் தயாரிக்கப்பட்ட இந்தக் கடிகாரங்கள் சரியான நேரம் காட்டுவதோடு நீடித்து நன்கு சேவை செய்கிறது. டயலின்மேல் "வெஸ்ட் எண்ட்" என்ற பெயரைப் பார்த்து வாங்குங்கள்.

**West End Watch Co.**

BOMBAY • CALCUTTA

SOWAR PRIMA
SPECIAL AUTOMATIC
12''' Size
Everbright Steel Rs. 240
*Write for FREE Catalogue.*

# நீங்களும் இத்தகைய அழகை பெறலாம்






அழகிய மாதரைப் பற்றி பொறாமை வேண்டாம். அழகின் இரகசியம் உங்கள் கையிலேயே இருக்கிறது. தவறாமல் கேரளா ஸாண்டல்வுட் சோப்பை உபயோகித்து வாருங்கள். அதன் அற்புத சுகந்தமும், மழமழப்பான செழிப்பான நுரையும் உங்கள் சருமத்தை மிருதுவாக்கி அழகுபடுத்தும்.

# கேரளா

சந்தன சோப்

கேரளா சோப் இன்ஸ்டிட்யூட்

கோழிக்கோடு



சென்னை ராஜ்ய தொழில் & வர்த்தக இலாகாவின் ஒரு பிரிவு

# கலை நகரிலே!

சுப்புடு

## கலாசார இறக்குமதி

நிதிமந்திரி தேஷ்முக் அவர்களின் தயவினால் தற்போது இந்தியாவுக்கு வரும் கலாசார கோஷ்டிகளுக்குச் சுங்கத் தீர்வை ஒன்றும் கிடையாது. இதன் பயனாக, பாரதத்தை நோக்கி மேற்படி கோஷ்டிகள் வந்தவண்ணம் இருக்கின்றன. அத்தகைய கோஷ்டி ஒன்று போலந்திலிருந்து சென்ற வாரம் புதுதில்லிக்கு வந்தது. நமது அன்புக்குப் பாத்திரமான சங்கீத நாடக அகாடமியார் அவர்களுக்கு ஒரு வரவேற்பளித்து நமது கலைகளில் சிலவற்றை அவர்களுக்குச் சமர்ப்பித்தனர். அகாடமியாருக்குக் "கல்கி"யிடம் விசேஷ அபிமானம் உண்டு. ஏனெனில், அவர்கள் "நட்சத்திர விழா" நடத்திய போது 'கல்கி' விசேஷ மலர் வெளியிட்டதோடில்லாமல், விழாவைப் பற்றிய கட்டுரை ஒன்றும் பிரசுரித்தது. மேற்கொண்டு, கட்டுரைக்குச் சுவை தரும் வகையிலும், அகாடமி காரியதரிசி ஸ்ரீமதி நிர்மலா ஜோஷியின் கவனத்தைக் கவரும் வகையிலும், ஒரு வாக்கியம் சேர்க்கப்பட்டிருந்தது. நாகஸ்வரத்தில் திரு ராஜரத்தினம் வாசித்த கல்யாணியைத் தோடி என்று அறிவித்த ஸ்ரீமதி ஜோஷிக்கும் நன்றி கூறப்பட்டிருந்தது அதிலே. இதனாலெல்லாம் அகாடமிக்கும் 'கல்கி'க்கும் உள்ள பாந்தவ்யம் நெருக்கமுற்றது. நிற்க:

கோமகவரன் நிஜாமின் ஹைதராபாத் மஹாலில் நடந்த இந்த வைபவத்திலே நீதிபதி ராஜமன்னார், மற்றும் வெளிநாட்டு ஸ்தானிகர்கள், உள்நாட்டு படேக்கள் எல்லாம் வந்து பிரசன்னமாகி யிருந்தனர். அன்று நடந்த கலை நிகழ்ச்சிகளிலெல்லாம் தலைசிறந்ததாக அமைந்தது குமாரி வஸந்தாவின் பரதநாட்டிய நிகழ்ச்சி. நறுக்குத் தெறித்தாற் போல் "நடனமாடினார்" பதத்தை வஸந்தாவில், வஸந்தா ஆடிவிட்டு காபி தில்லானாவைச் சோபிதமாய்ச் சமர்ப்பித்தார். 'பலத்தகரகோஷத்தினிடையே' என்னும் சொற்றொடரை நான் இங்கே பிரயோகிக்க விரும்பவில்லை. "நடன மாடினா"ருக்கு முன் "லோகான் ஆஹரியான்" என்ற ஸ்லோகத்துக்குப் பிடிக்கப்பட்ட அபிநயத்தைப் படத்தில் காணலாம்.



போலந்துக்காரருக்குப் பரம சந்தோஷம். பாரத சர்க்காருக்குப் பல ஆயிரம் ரூபாய் பெறுமானமுள்ள ஒரு பியானோவைப் பரிசாக அளித்தனர். இந்திய வாத்தியங்கள் பதிலுக்கு அளிக்கப்பட்டன. கேட்டால் மூர்ச்சித்து விடுவீர்கள். 1. தம்பூரா. 2. ஸரோட். 3. தபலா. 4. பக்கவாஜ். 5. விசித்திர வீணை.

என்ன, கேள்விக் குறி போடுகிறீர்கள்? கர்நாடக வாத்தியங்கள் எங்கே என்று கேட்கிறீர்களா? அது ஸ்ரீமதி நிர்மலா ஜோஷியைத்தான் கேட்க வேண்டும். மறுபடியும் மறுபடியும் நம்முடைய கவனத்தைக் கவரும் வகையில் ஏதாவது செய்து கொண்டுதான் இருக்கிறார்கள் அந்த அம்மாள்!

## ஆஸ்திகப் பெருக்கு!

ஆஸ்திகம் நலிந்து நாஸ்திகம் தழைத்து வருகிறது என்று எண்ணுபவர்களுக்கெல்லாம் சவால் விடுவது போல் புது தில்லியில் ஆஸ்திகம் பெருக்கெடுத்து ஓடுகிறது. விமான நிலையத்துக்கருகே மாயா நகர் என்றொரு நகர் நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது. அங்கேயுள்ள தமிழர்கள் ஒரு ஸத்ஸங்கம் நிறுவி ராதா கல்யாண உத்ஸவம் நடத்தினார்கள் சென்ற வாரத்திலே. அகண்ட நாம சங்கீர்த்தனம், பக்தி போஜனம் எல்லாம் சம்பிரதாயப்படி நடத்தியதோடல்லாமல் மாலை ஸ்ரீமதி மணி பெருந்தேவியின் இன்னிசைக் கச்சேரியும் ஏற்பாடு செய்திருந்தனர். ஸ்ரீமதி பெருந்தேவி, கலா க்ஷேத்திரத்தில் சாஸ்த்ரீய சங்கீதம் பயின்று சிரோமணி பட்டம் பெற்றவர். நல்ல கச்சேரி; பாணியான பாட்டு. நயமான சாரீரம் பெற்றிருப்பதனால், கேட்க இன்பமயமாக இருக்கிறது.

## நாடக வாரம்

பல ஆண்டுகளாகத் தமிழ் நாடகங்களில்லாமல் வறட்சியாயிருந்த புது தில்லியிலே தொடர்ந்து ஆறு நாட்களுக்கு நாடகங்கள் நடக்கப் போகின்றன. சென்னையிலிருந்து, காற்று நுழைய முடியாத இடத்திலும் நுழையும் நாரதர் சீனிவாச ராவ், "தங்கப் பதுமை" "ஸரஸா" டாக்டரும் பேயும்" என்ற மூன்று நாடகங்களைத் தக்ஷிண பாரத சங்கத்தார் ஆதரவில் போடுகிறார், 24, 25, 26 தேதிகளில். தென்னிந்திய கழகம் வஸந்த சேனா நாடகத்தை மூன்று நாட்களுக்குப் போடுகிறது.

## வெள்ளித் திரை

# ராஜா ராணி

குடும்பத்தின் வறுமை காரணமாக நாடகக் கொட்டகையில் டிக்கெட் விற்கும் வேலைக்குப் போகிறாள் ராணி. ராணியின் முக வெட்டும் சாகஸமும் பண வசூலைக் குவிக்கின்றன. ஆன வசூலை அபகரிக்க முயன்ற அயோக்கியர்கள், ராணிக்கு மயக்க மருந்து கலந்த 'டீ'யைக் கொடுத்து விடுகின்றனர். அந்தப் பொல்லாத 'டீ' தான் ராணியின் வாழ்க்கையிலேயே ஒரு திருப்பத்தை உண்டாக்குகிறது; அந்தத் திருப்பம் நாடக நடிகன் ராஜாவின் வாழ்விலும் மலருகிறது. மயக்க மருந்து கலந்த 'டீ'யைக் குடிக்கவில்லையென்றால் ராணி மயங்கிக் காருக்குள்ளே விழுந்திருக்க மாட்டாள்; அந்தக் கார் ராஜாவினுடையதா யில்லா விட்டால், ராஜா அவளைச் சந்தித்திருக்க மாட்டான்.—ராஜாவும் ராணியும் சந்திக்கவில்லையென்றால், காதல் ஏது, வேதனை ஏது, கதைதான் ஏது!

தூங்கி வழிந்த ராணி விழித்து எழுந்ததும் திரைக் கதையிலும் விழிப்பு ஏற்படுகிறது. தினப் பத்திரிகையில் வந்த ஒரு செய்தியைக் கண்டு, அவளை ஒரு பணக்கார வீட்டுப் பெண்ணென்று ராஜா தீர்மானித்து விடுகிறான். ராணியும் சந்தர்ப்பக் கோளாறு காரணமாகப் பணக்காரப் பெண் மாதிரியே நடிக்க வேண்டியிருந்தது. (இதைச் சரியென்று நீங்கள் ஒப்புக் கொள்ளா விட்டால் கதையே இல்லை!) ராஜாவின் எலக்டிரிக் கம்பெனியில் ராணி டைப்பிஸ்ட் வேலைக்கு அமருகிறாள். பிறகு ராஜாவும் ராணியும் சேர்ந்து நாடகத்தில் நடிக்கின்றனர். அதன் வெற்றி சிலர் மனத்தில் பொறாமையை உண்டாக்குகிறது; கதையும் வேறு திசையில் திரும்புகிறது. இந்தக் கதையின் ஆரம்ப முதல் வளர்ந்து வரும் சந்தேகப்பேய் என். எஸ். கிருஷ்ணனையும், டி. ஏ. மதுரத்தையும் பிடித்து ஆட்டிப் பாடாய்ப் படுத்தி விடுகிறது. சந்தேகப்படுவதற்குச் சாதகமான சூழ்நிலைகள் படத்தில் பலவிதத்தில் உருவாகின்றன. தன்னைப் பணக்கார வீட்டுப் பெண்ணென்று கூறிய ராணி, சங்கடத்தில் சிக்கிக் கொள்ளுகிறாள். அவளைத் தன் காரில் அழைத்துப் போய், அவள் வீட்டில் விட முயன்ற ராஜாவை ஏமாற்ற வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. அதற்காக அவள் மிஸ்டர் சமரசம் வீட்டுக் காம்பவுண்டில் அடிக்கடி பதுங்கிக் கொள்ளுகிறாள். இது "பதுங்கிக் கிடந்த பல சந்தேகங்களைக் கிளப்பி விடுகிறது; சந்தேகம் மனஸ்தாபத்தையும், பூசலையும் கிளப்பி விடுகிறது. திரைக் கதையையும் இழுத்துச் செல்லுகிறது.

நேஷனல் புரொடக்ஷன்ஸ் தயாரித்த "ராஜாராணி" படத்தின் ஹாஸ்யப் பகுதிக்கு என். எஸ். கிருஷ்ணனும் டி. ஏ. மதுரமும் பொறுப் பேற்றுக் கொண்டு சக்கைப் போடு போடுகின்றனர்.

"சிரிப்பு............இதன்
சிறப்பைச் சீர்தூக்கிப்
பார்ப்பதே நம் பொறுப்பு"

என்று இருவரும் பாடிப் பலவகைச் சிரிப்புக் கலையும் சிரித்துக் காட்டி, எல்லோரையும் சிரிக்கவைக்கின்றனர்.

## காந்தன்

ராணியின் கண்ணிழந்த தந்தைக்குத் தம் மகளின் நாடகத்தை அறிந்து கொள்ள முடிய வில்லை; சின்னஞ்சிறு வயதில் விதவையாகி விட்ட அவளுக்கு வயது வந்த பிறகும் உண்மையை அறிவிக்காது இருந்து விடுகிறார். ராணியின் உள்ளத்தில் காதல் மூண்டது. வேரூன்றி. உரம் பெற்று விட்ட பிறகு, விஷய மறிந்த தந்தை அக் காதலைக் கிள்ளி எறிய முயன்று படுதோல்வியடைகிறார். ராணியிடம் அவள் விதவை என்பதை யறிவித்து அவளைக் கண்ணீர் வெள்ளத்தில் மிதக்கச் செய்கிறார். ராணி உண்மையைத் தன்னிடம் சொல்லா மல் மறைத்து விட்டாள் என்பதற்காக ராஜா அவளை வெறுக்கிறான்.

கதையைத் துன்ப முடிவில் முடிக்க விரும் பாத திரைக் கதையாளர் கதையைக் கணிச மாகத் தட்டி, நீட்டி யிருக்கிறார்! அதுமட்டும் அல்லாமல் தானாக ஒரு முடிவை அடைய இருந்த கதையின் காதைப் பிடித்து உலுக்கி, அதை வேறு திசையில் இழுத்துச் செல்லு கிறார். கதை என்ன செய்யும், பாவம்! வேறு வழியில்லாமல் இழுத்ததிசையில் இழுபடுகிறது!

விஷங்குடித்த ராணியைச் சாகாமல் இருக்கச் செய்த என். எஸ். கிருஷ்ணன் தான், சாக்ரடீஸ் வேஷத்தில் இருந்த ராஜாவை, மோசக்காரர்களின் நாச வேலை காரணமாக விஷங் குடிக்க இருந்தவனை, தடுத்து உயிர் பிழைக்கச் செய்கிறார். அவர்களுக்கு மாத்திரம் அல்லாமல் படத் துக்கே உயிர் கொடுத்திருப்பவர் மிஸ்டர்சமரச மாக நடிக்கும் என். எஸ். கிருஷ்ணன் தான்.

நாடக மேடையில் தலைமை தாங்கிப் பேசிய போது அவர் கை, கால்களை உதறிக்கொண்டு, மென்று விழுங்கிப் பேச முயன்றது நடிப்பு மாதிரியில்லை, உண்மையாகவே தோன்றியது.

படத்தில் இடம் பெற்றிருக்கும் ''சேரன் செங்குட்டுவன்'' நாடகத்தைப் பார்த்தபோது ராணியிடம் பொறுமை உண்டாயிற்று. அவள் அருந்திய துயிலூட்டும்காப்பி மட்டும் கிடைத் திருந்தால் எல்லாரும் பாக்கியசாலிகள்தான்!

ராணியாகத் தோன்றும் பத்மினி நன்றாய்ப் பேசிச் சிரித்து, கண்ணீர்விட்டு, காதலித்து, பெருந் தூக்கம் தூங்கி அழகாக நடித்திருக் கிறார். தூங்கி வழிந்த கட்டத்தில் அவர் நடிப்பு பிரமாதம். இந்தக் காட்சி 'ரோமன் ஹாலிடே' என்னும் ஆங்கிலப் படத்தை நினைவூட்டுகிறது. என்றாலும், அந்தக் காட்சி பார்ப்பதற்கு நன்றாகவே இருந்தது.

சிவாஜி கணேசனுக்கு இந்தப் படத்தில் பல பாகங்க ளில் நடிக்கச் சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. நாடக மேடையில் சாக்ரடீஸ் வேஷத்தில் தோன்றியஅவர் சிரிப்பும், பேச்சும், நடிப்பும் அபாரமாயிருந்தன.

துண்டு துண்டாகப் பார்த்து ரஸிக்கக் கூடிய படம் ''ராஜா ராணி''.



# எப்பொழுதும் வெற்றி!



சத்துள்ள மூலப்பொருள்கள் அடங்கிய ருசிமிக்க, பார்லேஸ் க்ளுக்கோ பிஸ்கட்டுகள். ஜனங்கள் நேசிக்கும்படியான கட்டுமஸ்தான திரேகக்கட்டை அளிக்க உதவுகின்றன.

ஆம் அந்த ரகசியம் இதுதான்.

## பார்லேயின் க்ளுகோ பிஸ்கட்டுகள்

புஷ்டி தரும்
விடமின்கள்
சேர்க்கையுடையவை






## 62. சென்னைமா நகரம்

நன்னாடாகிய தென்னாட்டில் நதிகளால் புகழ் பெற்ற நகரங்கள் பல உண்டு; ஆயினும் நகரங்களால் புகழ் பெற்ற நதிகளும் உண்டு என்பதற்கு ஒரு சான்று சென்னைமா நகரத்திலே காணலாம்.

மூந்நூறு ஆண்டுகளுக்கு முன்னே முளைத்தது சென்னப் பட்டினம். அங்கே வாணிபம் செய்யப் போந்த ஆங்கிலேயர் கூவம் நதிக்கரையிலே ஒரு கோட்டை கட்டினர்; அக் கோட்டை நகரத்துக்கு 'வெள்ளை நகரம்' (White Town) என்று பெயர் இட்டனர்; அருகே இருந்த நரிமேடு முதலிய வெளியிடங்களை நாளடைவில் வளைத்தனர்; வர்த்தக வளம் பெற்றுத் திளைத்தனர். முன்னாளில் பட்டினம் என்பது காவிரிப்பூம் பட்டினத்தைக் குறித்தாற் போன்று இந் நாளில் சென்னப் பட்டினமே பட்டினம் என்னும் பெயருக்கு உரியதாயிற்று. சென்னையின் சீர்மைக்கு ஏற்ற முறையில் கூவம் நதியின் பெருமையும் குதித்தெழுந்தது.

நாற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்னே சென்னையில் வாழ்ந்தார் ஒரு பெருஞ் செல்வர். திருவல்லிக்கேணிப் பெருமான் திருநாமமாகிய தெள்ளிய சிங்கர் என்பது அவர் பெயராய் அமைந்தது. "திருவேறு தெள்ளியராதலும் வேறு" என்னும் பொது விதிக்கும் புறனடையாக அமைந்தவர் அவர். பாண்டி நாட்டுப் புலவர் ஒருவர் அவரை நாடி வந்தார். அட்டாவதானம் செய்ய வல்ல அப் புலவர் தமது வருகையைத் தெள்ளிய சிங்கருக்குத் தெரிவிக்குமாறு ஒரு சீட்டுக் கவி தீட்டினார்.

**"பொங்கி வளர் செல்வச்**
**செழுஞ் சென்ன பட்டினப்**
**பொன்னகர்த் தெள்ளிய சிங்க**
**பூப.எதிர் வந்து கண்டு**
**உன் சபையில் அவதான**
**புனிதம்அறி வுறல்வேண் டுமே"**

என்று அவர் எழுதி விடுத்த பாட்டில் சென்னப் பட்டினத்தின் செழுமை சிறப்பாகப் புலனாகின்றது.

பொன்னகர் என்று புலவர்களால் புகழ்ந்துரைக்கப்பட்ட சென்னை சீராக விரிந்து வளர்ந்தது; பல பேட்டைகளையும் பாக்கங்களையும் ஊர்களையும் அங்கங்களாகக் கொண்டு அகன்று பரந்தது. அடையாறு முதலிய சிற்றாற்றங்கரைகளில் அழகிய மாடங்கள் எழுந்தன. எழுமூருக்கும் (எழும்பூர்) கோட்டைக்கும் இடையே கிடந்த நரிமேடு பூந்தோட்ட நகரம் (Park Town) ஆயிற்று. கந்த கோட்டம் என்னும் முருகன் கோயில் அங்கு எழுந்தது. கண்ணினைக் காக்கும் இமை போல் கந்த கோட்டம் சென்னையம் பதியைக் காத்தருள்கின்றது. அதன் கருணையை வியந்து அருமையாகப் பாடினார் இராமலிங்க அடிகள்.

**"நீர்உண்டு பொழிகின்ற காருண்டு விளைகின்ற**
**நிலன் உண்டு பலனும் உண்டு**
**நிதிஉண்டு துதிஉண்டு மதிஉண்டு**
**கதிகொண்ட**
**நெறி உண்டு நிலையும் உண்டு**
**ஊர்உண்டு பேர்உண்டு மணிஉண்டு**
**பணிஉண்டு**
**உடை உண்டு கொடையும் உண்டு**
**உண்டுண்டு மகிழவே உணவுண்டு**
**சாந்தமுறும்**
**உளம் உண்டு வளமும் உண்டு**
**தேர்உண்டு கரிஉண்டு பரிஉண்டு மற்றுள்ள**
**செல்வங்கள் யாவும் உண்டு**
**தேனுண்டு வண்டுறு கடம்பணியும் நின்பதத்**
**தியானம்உண் டாயில் அரசே**
**தார்உண்ட சென்னையில் கந்தகோட்**
**டத்துள்வளர்**
**தலம்ஓங்கு கந்த வேளே**
**தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி**
**சண்முகத் தெய்வ மணியே"**

என்று அவர் மனம் உருகிப் பாடினார்.

பன்னலம் திகழும் சென்னையம்பதியில் பல சமயங்களும் பாங்குற ஓங்கி வளர்

கின்றன. ஈசன் அருள் பெற்ற திருஞான சம்பந்தர் போற்றிப் புகழ்ந்த மயிலாப்பூரில் யேசுநாதரின் பெருமையைப் பேசினார் செயின்ட் தாமஸ் என்னும் சீலர். அவர் சேவைக்கு ஒரு சான்றாக விளங்குகின்றது 'சாந்தோம்' என்னும் கடற்கரைப் பாக்கம். தென்னிய சிங்கர் கோயில் கொண்டுள்ள திருவல்லிக்கேணியில் மகமதியர் வழிபடும் மசூத்தான பள்ளி வாசலும் உண்டு. அரனும் அரியும் அமர்ந்தருளும் அக நகரில் அமணர்கள் வணங்கும் ஆலயமும் அமைந்து அணி செய்கின்றது. பட்டினத்து அடிகளின் உள்ளங் கவர்ந்த திருஒற்றியூருக்கு அருகே கிருஸ்தவத் தொண்டராகிய செயின்ட் பீட்டரின் பெயர் தாங்கிய ராயபுரம் நிலைபெற்றுள்ளது. பீட்டர் யேசுநாதரின் அணுக்கத் தொண்டர்; தமிழ் நாட்டுக் கிருஸ்தவர்கள் ராயப்பர் என்று அவரைப் போற்றினர். வட சென்னைக் கடற்கரையில் வாழ்ந்த மீனவர் சிறப்பாக அவரை வழிபட்டனர்; ராயப்பபுரம் என்று அப்பாக்கத்திற்குப் பெயரிட்டனர்; ராயப்பபுரம் நாளடைவில் ராயபுரம் என மருவிற்று.

தேவாரப் பாடல் பெற்ற திருஒற்றியூரைச் சிவலோகமாகவே கண்டார் பட்டினத்து அடிகள்.

**"வாவி எல்லாம் தீர்த்தம் மணல் எல்லாம் வெண்ணீறு**
**காவனங்க ளெல்லாம் கணநாதர்—பூவுலகில்**
**ஈது சிவலோகம் என்றென்றே மெய்த்தவத்தோர்**
**ஓதும் திருவொற்றி யூர்"**

*(வாவி - குளம்; காவனம் - சோலை)*

என்பது அவர் திருவாக்கு.

இத்தகைய செம்மை வாய்ந்த திருவொற்றியூரில் தன் பெயரை நிலைநிறுத்த விரும்பினான் ஒரு வெள்ளைக் கவர்னர். மூன்று ஆண்டுகள் அவன் சென்னைக் கவர்னராகப் பணி செய்தான். காலட் என்பது அவன் பெயர். பேராசை பிடித்த அப்பெருமகன் திருவொற்றியூரின் ஒரு சார் சென்னைச் சாலியர்களைக் குடியேற்றினான்; கோயிலும் கேணியும் அமைத்தான்; அக் குடியிருப்பைக் காலட்பேட்டை என்று அழைத்தான். அப்பெயர் பொது மக்கள் நாவில் காலாட்டுப் பேட்டை என்று சிதைந்தது; பின்பு காலாடிப் பேட்டை எனத் திரிந்தது. காலெட்டைக் காலாடியாக்கிப் பேராசை கொண்ட பிறநாட்டவர்க்கு நல்லதொரு பாடம் கற்பித்தனர் ஒற்றியூர் மக்கள்.

இவ்வாறு சீரழிந்த இன்னொரு பெயரும் சென்னையிலே உண்டு. திருமயிலையைச் சார்ந்த வாராவதியொன்று ஹாமில்டன் என்னும் வெள்ளையர் பெயரைப் பெற்றது. மொழிக்கு முதலாக ஹகரம் நிலைக்காது என்னும் தமிழின் நீர்மையை அவ்வெள்ளையர் உணர்ந்தாரில்லை. ஹிந்தி என்பது இந்தியாகும். ஹாஸ்பிட்டல் என்ற ஆங்கிலச் சொல் ஆஸ்பத்திரி என்றே வழங்கும். இந்த முறையில் ஹாமில்டன் வாராவதி ஆமிட்டன் வாராவதி ஆயிற்று; ஆமிட்டன் வாராவதி அம்பட்டன் வாராவதி எனத் திரிந்தது. அது ஆங்கிலத்தில் பார்பர்ஸ் பிரிட்ஜ் என்று மொழி பெயர்க்கப்பட்டு இன்றும் சென்னைமா நகரில் வழங்கி வருகின்றது. தமிழின் நீர்மையறியாது பெயரிடுதல் தவறு என்பதைக் காலாடிப்பேட்டையும், அம்பட்டன் வாராவதியும் நன்கு எடுத்துக் காட்டுகின்றன.

சென்னைமா நகரின் அழகுக்கு அழகு செய்வது அதன் கடற்கரைக் காட்சி. மாநிலம் சுற்றிய மாந்தர் எல்லாம் அதன் மாட்சியை மனமாரப் புகழ்ந்துள்ளார்கள். கடற்கரையை அகலாது அணுகாது நேர்மையாகச் செல்லும் நெடுஞ்சாலையின் அழகும், விரிந்த வெண்மணற் பரப்பில் வீசுகின்ற மெல்லிய பூங்காற்றின் சுகமும், கருங்கடலில் தவழ்ந்து வரும் கப்பல்களைக் கதிர்க் கரம் விரித்துத் துறைமுகத்துக்கு அழைக்கும் கலங்கரை விளக்கின் ஒளியும் சென்னைக்கே உரிய தனிச் செல்வமாகும்.

## அறிவிப்பு

சென்ற பிப்ரவரி மாதம் இறுதிவரையில் பொன்மலை, திருச்சி ஜங்ஷன் ஆகிய இடங்களில் 'கல்கி' பத்திரிகையை விநியோகம் செய்து வந்த ஸ்ரீ கே. என். ஜெகன்னாதய்யர் என்பவர் மார்ச் மாதம் முதல் தேதியிலிருந்து 'கல்கி' விநியோக வேலையிலிருந்து நீக்கப்பட்டு விட்டார். மேற்படி ஜெகன்னாதய்யருக்கும் 'கல்கி' காரியாலயத்திற்கும் எவ்விதமான தொடர்போ சம்பந்தமோ கிடையாது. ஆகவே எங்கள் சார்பாக அன்னாருடன் வியாபாரமோ அல்லது வேறு கொடுக்கல் வாங்கலோ யாராவது வைத்துக் கொண்டால் அது 'கல்கி' காரியாலயத்தை எவ்விதத்திலும் கட்டுப்படுத்தாது.

மானேஜர்: கல்கி காரியாலயம், கீழ்ப்பாக்கம் :: மதராஸ் - 10




நௌஷாராவில் இருந்து ரஜௌரிக்கு இருபத்தொன்பது மைல். ரஜௌரி நகரத்தை நோக்கி ஜீப் வண்டிகள் ஓடிக் கொண்டிருக்கும் போது யாருக்கும் சாலைக்குப் பக்கத்தில் உள்ள எழில் மிக்க இயற்கைக் காட்சிகளைப் பார்க்கவே தோன்ற வில்லை. இமயமலையின் பனி மூடிய பீர்பஞ்சால் சிகரம் எல்லோரையும் காந்தம் போல் கவர்ந்து இழுத்து விட்டது. அதன் கம்பீரத்தைப் பார்த்த வண்ணம் இந்த உலகை மறந்து இருந்தோம். இவ்வாறு எத்தனை நாழிகை இருந்தோம் என்று தெரிய வில்லை. "இது தான் ரஜௌரி நகரம்" என்றதும் வியப்புடன் திரும்பிப் பார்த்தோம்.

ரஜௌரி தவி நதிக்கரையில் மாடமாளிகை கூட கோபுரங்களுடன் சிறிய பெரிய கட்டடங்களையுடைய சிறிய நகரம். அந்த நகரத்துக்கு அப்பால் உள்ள ஒரு பெரிய குன்றின் உயரத்தில் கண்ணைக் கவரும் முறையில் பழங்காலத்துக் கோட்டை ஒன்று காட்சி அளிக்கிறது. அதன் உச்சியில் நமது பாரத மணிக்கொடி, அசோகச் சக்கரம் பொறித்த மூவர்ணக் கொடி பட்டொளி வீசிப் பறந்து கொண்டிருந்தது. அந்தக் காட்சி மறக்க முடியாத அருமையான காட்சி.

"இந்தக் கோட்டையின் உச்சியில் ஏழு ஆண்டுகளுக்கு முன் பாகிஸ்தான் கொடி பறந்து கொண்டிருந்தது" என்றார் எங்களுடன் வந்த ராணுவ அதிகாரி.

"பாகிஸ்தான் கொடியா! அப்படியானால் இந்த நகரத்தைக்கூடப் பாகிஸ்தானிகள் கைப்பற்றிக் கொண்டிருந்தார்களா!"

"பாகிஸ்தான் வீரர்களும், பகல் கொள்ளைக்காரர்களும் இந்த நகரிலே செய்திருக்கும் அட்டூழியத்தைச் சாதாரண வார்த்தைகளால் விளக்கிக் கூற முடியாது" என்று சொல்லித் தூரத்தில் தெரிந்த ஒரு கட்டடத்தைக் காண்பித்து, "அதோ பார்த்தீர்களா ஒரு கட்டடத்தை!" என்று கேட்டார்.

"அடாடா! புத்தம் புதுக் கட்டடம் வெடி குண்டு பட்டுச் சிதைந்து கிடக்கிறதே!"

"அநேகமாக இந்த மாதிரிதான் இந்த ஊரில் உள்ள எல்லாக் கட்டடங்களும் வெடி குண்டுகளால் இடிந்தும் சிதைந்தும் பாழடைந்தும் கிடக்கின்றன."

"இந்த ஊரில் யுத்தத்துக்கு முன்பு ஜனத்தொகை எவ்வளவு இருக்கும்!"

"முப்பதினாயிரம்."

"முப்பதினாயிரமா! அப்படியானால் பெரிய நகரம்தான். இப்பொழுது எவ்வளவு பேர் இருக்கிறார்கள்!"

"சுமார் மூவாயிரம்!"

"மூவாயிரமா! வெறும் மூவாயிரம்தானா!"

"ஆமாம், மூவாயிரம் பேரேதான். அதுவும் வயது சென்றவர்கள்."

"ஏன், வாலிபர்கள் குழந்தைகள் எல்லாம் என்ன ஆனார்கள்!"

"அதை எப்படிச் சொல்வேன்! அதோ தவி நதிக் கரையில் ஒரு கோயில் தெரிகிறதல்லவா! அதற்கு எதிரில் பெரிய தீ வளர்த்தார்கள். தீ சொக்கப்பனை போல் வானோங்கி எரிந்தது. அந்தத் தீயில், ஐயோ எப்படிக் கூறுவேன்! பச்சிளம் குழந்தைகளை, பால் மணம் மாறாத






பாலகர்களை உயிரோடு போட்டுக் கொன்று விட்டார்கள், பாவிகள்'' என்றார். இதைச் சொல்வதற்குள் அவர் பலமுறை கண்ணீர் விட்டுவிட்டார். அவர் உதடுகள் துடித்தன. அவரால் சற்று நேரம் பேசவே முடியவில்லை.

அவருடைய சோகம் தணிந்த பிறகு ''அந்தக் கொடுமையை இந்த நகரத்து மக்கள் பார்த்துக் கொண்டா இருந்தார்கள் !'' என்று ஆவேசமாகக் கேட்டார் ஒரு பத்திரிகையாளர்.

''நகர மக்கள் என்ன செய்வார்கள் ! மேலே விமானத்திலிருந்து குண்டு மழை பொழிகிறது! வீதிகளில் இயந்திர பீரங்கிகள் குண்டுகளைக் கக்கிக் கொண்டிருந்தன. கொள்ளைக்காரர்களும், பாகிஸ்தான் வீரர்களும் கையில் சுழல் துப்பாக்கியை வைத்து மக்களைச் சுட்டுக் கொண்டே இருந்திருக்கிறார்கள்.''

''கொடுமை! கொடுமை! காதால் கேட்க முடியாத பயங்கரக் கொடுமை !''

''இதையே கொடுமை என்கிறீர்களே ! இந்த ஊரில் இருந்த மங்கைகள் பட்ட பாட்டைக் கேட்டால் என்ன சொல்வீர்களோ !''

''பெண்மணிகளை என்ன செய்தார்கள் அந்தப் பாதகர்கள் !''

''என்ன செய்தார்கள் ! அதோ மலை மேலே தெரிகிறதே கோட்டை, தனிதால் கோட்டை, அந்தக் கோட்டைக்குள்ளே ஒரு கிணறு இருக்கிறது. வற்றாத ஊற்றுப் போல் பொங்கி வரும் தண்ணீரும், பாதாளத்தையே தொட்டு விடும் ஆழமும் உடையது. அந்தக் கோட்டைக்குப் பருவ மங்கைகளையும், பத்தினித் தெய்வங்களையும் பலாத்காரமாகக் கொண்டு சென்று அந்தப் பாவிகள் படுத்திய பயங்கரக் கொடுமைகளை எந்த மொழியில் உங்களுக்குச் சொல்லுவேன். செய்யக்கூடாத கொடுமைகளைச் செய்தபின் பல பெண்மணிகளை அந்த மலைமீதிருந்து அப்படியே உருட்டி விட்டனர். பலரை அந்தப் பயங்கரக் கிணற்றுக் குள்ளே வீசி எறிந்தனர். இவ்வாறு அந்த இரக்கமற்ற ராட்சசர்கள் ரஜௌரி நகரத்தில் மனித உருவம் படைத்தவர்கள் செய்ய நினைக்க முடியாத பஞ்சமா பாதகங்களைச் செய்து கொண்டிருந்தனர்.''

''இந்தச் செய்திகளைக் காது கொடுத்துக் கேட்க முடியவில்லையே! அப்பொழுது இந்த நகரத்து மக்கள் எப்படி அழுது துடித்தனரோ! ஆதரவற்ற மக்களுக்கு எப்பொழுது எப்படி உதவி கிடைத்ததோ !''

''இந்தச் சமயத்தில் நமது வீரர்கள் கொடிய விஷ ஜந்துக்கள் நிறைந்த காட்டிலும் மலையிலும் கால் நடையாக வந்து எதிரிகளைத் தாக்க ஆரம்பித்தனர். இந்திய வீரர்களைக் கண்டதும் ரஜௌரி நகரத்து மக்கள் அவர்கள் காலடியில் விழுந்து கதறி அழுதனர். மக்களின் துயரைத் துடைக்க வந்த நமது வீரர்கள் அவர்களுக்கு அபயமளித்து எதிரிகளை அடித்துத் துரத்தி வந்தனர். அவர்கள் கண்ணீரைத் துடைத்தனர். வீதிகளிலும், வீடுகளிலும், கிணறுகளிலும் நாற்றமெடுத்துக் கிடந்த மனித உடல்களை அப்புறப் படுத்துவதற்குள் நமது வீரர்கள் பட்ட பாடு, அடாடா! பொன் எழுத்தில் பொறிக்கப்பட வேண்டிய பணியாகும்'' என்றார்.

நமது இந்திய வீரர்களின் பணியை, இந்திய சர்க்காரின் தீரத்தை மனத்துக்குள்ளாகவே பாராட்டி மகிழ்ந்து போனோம்.

பாகிஸ்தான் நடத்திய பயங்கர அட்டூழியங்களின் சிகரமாக இருந்திருக்கின்றன ரஜௌரி



நகரில் அவர்கள் செய்த கொடுமைகள். அப்படிப்பட்ட நகரம் இன்று நமது ராணுவத்தின் பாதுகாப்பில் அமைதியாக இருப்பதைக் கண்ணால் பார்த்து நமது ராணுவத்தின் சேவையைப் பாராட்டாமல் இருக்க முடியாது.

## போர்முனையில் அவசர உதவி

மனத்தால் கற்பனை செய்து பார்க்க முடியாத பயங்கர யுத்தத்தில் ஈடுபட்டிருக்கும் போது வீரர்களுக்கு அபாயங்கள் ஏற்படும் அல்லவா! எதிரிகளின் துப்பாக்கிக் குண்டுகள் வீரர்களைத் தாக்க நேரிடுமல்லவா! அப்படி அடிபட்ட வீரர்களின் கதி என்ன ஆவது! அவர்கள் அப்படியே போர்முனையில் அனாதரவாகக் கிடக்க வேண்டியதுதானா!

இல்லை; அடிபட்ட வீரர்களுக்கு உடனுக்கு உடன் அவசர உதவிகள் அளிக்கப்படுகின்றன. அவர்களை உடனே ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லுகிறார்கள். அவர்களுக்கு மனித உதவியால் என்ன எல்லாம் உதவி செய்ய முடியுமோ அவ்வளவும் கண் இமைக்கும் நேரத்துக்குள் அவர்களுக்கு அளிக்கப்படுகின்றன.

போர்முனையில் அடிபட்ட வீரர்களுக்கு அதே இடத்தில் எவ்வாறு அவசர உதவி அளிக்கப்படுகிறது என்பதை கர்னல் சிவசங்கரன் பத்திரிகையாளர்களுக்கு விளக்கிக் காட்டினார். அப்படிச் சொல்வதை விட, தத்ரூபமாகச் செய்தே காண்பித்தார் என்று கூறுவது பொருத்தமாயிருக்கும்.

போர்முனையில் அடிபட்ட வீரர்களுக்கு எப்படி அவசர உதவி அளித்துக் காப்பாற்றுகிறார்கள் என்பதைப் பாருங்கள்:

மலையின் உயரத்திலே ஆபத்தான இடத்திலே போர் நடக்கிறது. எதிரியின் குண்டுகளை லட்சியம் செய்யாமல் வீரர்கள் போரில் ஈடுபட்டிருக்கிறார்கள். எவ்வளவோ ஜாக்கிரதையாக இருந்தும் அதோ ஒரு சிப்பாய்க்கு அடிபட்டு விட்டது. அவருக்கு அருகில் இருக்கும் சிப்பாய்கள் உடனே அந்தச் சிப்பாய்க்கு உதவி செய்ய ஆரம்பித்து விட்டார்கள். சுறுசுறுப்பாகவும் அதே சமயத்தில் நிதானமாகவும் அவர்கள் காரியத்தில் ஈடுபடுகிறார்கள்! கோவேறு கழுதையின் முதுகில் நாற்காலியை வைத்துக் கட்டுகிறார்கள். அதன் மீது அடிபட்ட சிப்பாயைத் தூக்கி வைத்து அவரையும் கட்டுகிறார்கள். அடாடா! அந்தக் கோவேறு கழுதை கூட அல்லவா மிகுந்த ஜாக்கிரதையாக மலைச்சரிவில் நடக்கிறது.

போர்முனையின் எல்லையில் எதிரிகள் தெரிந்து கொள்ள முடியாமல் மரக் கிளைகளாலும், கொடிகளாலும் மூடி மறைக்கப்பட்ட ஜீப் வண்டியை நோக்கி அந்தக் கோவேறு கழுதை வருகிறது. கோவேறு கழுதையின் மேல் இருந்த அடிபட்ட சிப்பாய் ஜீப் வண்டியில் ஏற்றப்படுகிறார். ஜீப் வண்டி உடனே அருகில் உள்ள 'ஆம்புலன்ஸ்' வண்டிக்குப் போகிறது. அங்கு அடிபட்ட சிப்பாய்க்கு முதல் உதவி அளிக்கப்படுகிறது. முதல் உதவி சிகிச்சை கொடுத்து முடிந்ததும் அந்த அடிபட்ட சிப்பாயை அருகில் இருக்கும் ராணுவ ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்கிறார்கள்.

இந்தக் காரியங்கள் நடைபெறுவதற்குள் அந்த நோயாளி எதிரியின் குண்டுக்கு மேலும் இரையாகி விடாமல் காப்பதற்குச் சிப்பாய்கள் எடுத்துக் கொள்ளும் சிரமம் கொஞ்ச நஞ்சமல்ல. இந்தப் போர் முனை அவசர உதவிச் சிகிச்சையைப் போர்க்களத்திலேயே நிகழ்வது போல மயிர்க்கூச்ச எடுக்கும்படி நடத்திக் காண்பித்த கர்னல் சிவசங்கரனை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

கர்னல் சிவசங்கரனைப் பார்த்து, "நமது வீரர்களைப் பற்றி உங்கள் உண்மையான அபிப்பிராயம் என்ன!" என்று ஒரு கேள்வியைத் தூக்கிப் போட்டார், எங்களுடன் வந்த பத்திரிகையாளர்களில் ஒருவர்.

"எதைப் பற்றிக் கேட்கிறீர்கள்!" என்றார் கர்னல் சிவசங்கரன்.

"அவர்கள் ஒழுக்கத்தைப் பற்றித்தான். பொதுவாகச் சிப்பாய்களைப் பற்றி மக்களுக்கு நல்ல அபிப்பிராயம் ஏற்படுவதில்லையே!"

"அது மிகவும் தவறான அபிப்பிராயம். இந்திய சிப்பாய்களுக்கு ஒழுக்கக் கேட்டால் ஏற்படும் வியாதியே இல்லை. இதை டாக்டர் என்ற முறையில் மிகுந்த உறுதியுடன் என்னால் கூற முடியும். அவ்வாறு சிப்பாய் மீது சந்தேகம் ஏற்பட்டால் அப்படிப்பட்ட சிப்பாய் மீது ராணுவ அதிகாரிகள் மிகக் கண்டிப்பான நடவடிக்கை எடுத்துக் கொள்வார்கள்."

ராணுவம்! என்பது என்ன! மக்களுக்குப் பாதுகாப்பு! அளிக்கும் வேலி போல்தானே. வேலியே பயிரை மேய்ந்தால் பிறகு யார் யாரைப் பாதுகாக்க முடியும்!

## இஸ்பேட் திறந்தவெளி அரங்கம்

இரவு பகல் இருபத்திநாலு மணி நேரமும் போர்ப் பயிற்சியும், போர் முனையைப் பற்றிய சிந்தனையும் மட்டும் இருந்தால் வீரர்கள் மன நிலை உணர்ச்சியற்றுப் போகுமல்லவா! அதற்காக ரஜௌரி ராணுவ முகாமில் இஸ்பேட் திறந்தவெளி அரங்கம் ஒன்று அமைத்திருக்கிறார்கள். அதில் சிப்பாய்கள் தாங்களே ஆடலும் பாடலும் நிகழ்த்தி மகிழ்வதற்கு ராணுவ அதிகாரிகள் ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

அகில இந்தியப் பத்திரிகையாளர்களுக்காகச் சிப்பாய்கள் ஒரு விசேஷ கலை நிகழ்ச்சி நடத்தினார்கள். அந்த நிகழ்ச்சியில் ஆடலும் பாடலும், அபிநயமும், நாடகமும் கலந்திருந்தன.

மேடை மீது ஆணும் பெண்ணும் சேர்ந்து நடனமாடும் ஒரு காட்சியைப் பார்த்ததும் ஒரு கணம் திகைத்துப் போய் விட்டோம். "ராணுவ முகாமில் பெண்மணிகளா!" என்று ஆச்சரியப்பட்டுப் போனேன். பிறகு விசாரித்ததில் ஆண்களே பெண் வேடம் தாங்கி ஆடினார்கள் என்று தெரிய வந்தது. பண்பட்ட தொழில் நடிகர்கள் கூடப் பார்த்து வியக்கும் வண்ணம் நடித்தார்கள் சிப்பாய்கள்.

நடனத்துக்குப் பின் ஒரு நாடகம் நடைபெற்றது. நாடகக் கதையைக் கேளுங்கள்:

ஒரு அழகான பெண்மணி தன் கற்பைக் காப்பாற்றிக் கொள்வதற்காகச் செய்யும் சாகஸங்களைப் பின் அணியாகக் கொண்டு புனையப்பட்ட ஹாஸ்யக் கதை. அழகு காரணமாக பெண் பல துன்மார்க்கர்களின் பார்வையில் படுகிறாள். அதிலிருந்து தப்ப ஒரு யோசனை செய்கிறாள். அவள் சூழ்ச்சி தெரியாமல் பெண்ணின் மோக வலையில் ஈடுபட்ட வளையல்காரர், புடவைக்காரர், இன்னொரு மைனர் எல்லாரும் ஒரு நாளில் ஒரே நேரத்தில் அந்த அழகியின் வீட்டுக்கு வந்து விடுகிறார்கள். ஒவ்வொருவரும் இன்னொருவருக்குப் பயந்து இந்த வீட்டி


SIROLIN


நீம்
டுத் பேஸ்ட்

# திரு. வி. வி. ஸி. ஆர். வையாபுரி முதலியார்

## அவர்களின் வாழ்க்கைக் குறிப்பு

சேலம் ஜில்லாவைச் சேர்ந்த திருச்செங்கோட்டில் நூற்றுக்கணக்கான வருஷங்களாகப் பிரபல குடும்பமாக வாழ்ந்து வரும் புன்னிக்காரர் குடும்பத்தில் திரு இராமலிங்க முதலியாரின் மூன்றாவது புதல்வராக திரு வையாபுரி முதலியார் அவர்கள் 3 – 8 – 1890-ல் பிறந்தார். இவர்கள் குடும்பத்தினர் பரம்பரையாக நூல் வியாபாரம் செய்து கொண்டு வருவதால் பல்வேறு ஜில்லாக்களிலும் உள்ள செங்குந்த வர்த்தகர்களுக்கு இக்குடும்பத்தினரை நன்கு தெரியும். இக்குடும்பத்தினருக்குச் சேலம் நகரிலும் வர்த்தக ஸ்தலம், வாசஸ்தலம் முதலியன உள்ளன. இதன் காரணமாக வையாபுரி முதலியார் அவர்கள் ஸ்ரீ ராஜாஜி அவர்கள் நகரசபைத் தலைவராக இருந்த காலத்தில் சேலம் நகரசபையில் 35 ஆண்டுகளுக்கு முன்னர் கவுன்சிலராக இருந்திருக்கிறார். 1936-ம் ஆண்டுமுதல் சில வருஷங்கள் திருச்செங்கோடு பஞ்சாயத்து போர்டு தலைவராகவும், சில வருஷங்கள் சேலம் ஜில்லா போர்டு அங்கத்தினராகவும் இருந்திருக்கிறார்.



1936-ம் ஆண்டில் புன்னிக்கார் மில்ஸ் லிமிடெட்டை ஆரம்பித்து அதன் வளர்ச்சிக்காகப் பெரிதும் உழைத்து அதன் மானேஜிங் ஏஜண்டாக இருந்து, நூற்றுக் கணக்கான மக்கள் பிழைப்பிற்கு உதவி வந்தார். மில் ஆரம்பித்த பின் மில் அலுவல் காரணமாக பொதுநல வாழ்க்கையில்' அதிக பங்கு கொள்ளாவிடினும் ஓழிந்தபோதெல்லாம் பொதுநல சேவை செய்து வந்தார். திருச்செங்கோடு மாவட்டக் கழக உயர்நிலைப் பள்ளியின் பெற்றோர் சங்கத் தலைவராக இருந்து பல கட்டடங்கள் கட்டுவதற்கு ஆதரவாக இருந்தார். தாம் நிறுவிய திருச்செங்கோடு கிருத்திகைச் சங்கத்தில் முக்கியஸ்தராகவும் இன்னும் பல துறைகளில் பொதுநல சேவை செய்து வந்தார்.

இவரது குடும்பத்தினரும் இவரும் தர்ம கைங்கர்யங்களுக்குப் பெயர்போனவர்கள். வையாபுரி முதலியார் அவர்கள் பல ஆயிரக் கணக்கில் செலவு செய்து கோவை பெரிய நாயக்கன் பாளையத்தில் இருக்கும் ஸ்ரீ ராமகிருஷ்ண வித்யாலயத்தில் ஒரு கட்டடமும் திருச்செங்கோட்டில் பிரசவ விடுதியொன்றையும் கட்டியுள்ளார். திருச்செங்கோடு உயர்நிலைப் பள்ளிக்கு ஒரு கட்டடம் கட்டிக்கொடுக்க இசைந்து அக்கட்டட வேலை நடந்து வருகிறது.

திருச்செங்கோடு தேவாலயத்திற்குத் தங்க சப்பரமும், ஸ்ரீ அர்த்தநாரீஸ்வர சுவாமிக்குத் தங்ககிரீடமும் செய்துள்ளார். சேலம் செவ்வாய்பேட்டை நூல் வியாபாரிகள் சங்கத்தின் மூலம் திரௌபதி அம்மனுக்கு வெள்ளிக் குதிரை வாகனமும் செய்து வைத்திருக்கிறார். உள்ளூரில் மற்றும் பல அறச் செயல்கள் ஆற்றி வந்தார்.

மிக்க கண்யமும் பெருந்தன்மையும், வாய்ந்தவர். எல்லோருடைய மதிப்புக்கும் பாத்திரமானவர். சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார், டாக்டர் சுப்பராயன் முதலியவர்கள் இவரது நெருங்கிய நண்பர்கள். இவரது தமையனார் காலஞ்சென்ற டி. ஆர். கந்தப்ப முதலியார் பொது ஜன அபிமானியாகத் தொண்டாற்றினர். இவரது தம்பி பிரபல நூல் வியாபாரியும் பழனி ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமிக்குப் பல சிறந்த அறச் செயல்கள் ஆற்றி வருபவரும், மேற்படி தேவஸ்தான டிரஸ்டியுமான திரு. வி. வி. ஸி. ஆர். முருகேச முதலியாராவார்.

பிரபல சினிமாத் தொழில் அதிபரும், சேலம் மாடர்ன் தியேட்டர்ஸ் லிமிடெட்டின் மானேஜிங் ஏஜண்டும், தென் இந்தியாவில் அலிபாபா என்ற படத்தை முதன் முதலாக முழு நீள கலர் படமாக தயாரித்து டைரக்ட் செய்தவருமான திரு. டி. ஆர். சுந்தரம், B. A., B. Sc. (Leeds) அவர்கள் இவர்களிருவருக்கும் இளையவராவார்.

அன்னவர் 28-2-56 செவ்வாய்க்கிழமை மாலை 5-30 மணிக்குத் தமது மனைவியாரையும், ஐந்து குமாரர்களாகிய ஆர். வி. மாணிக்கம், ஆர். வி. கோபால், ஆர். வி. பொன்னுசாமி, ஆர். வி. சொக்கலிங்கம், ஆர். வி. கணபதி அவர்களையும், இரு புத்திரிகளான ஸ்ரீமதி ஆதிலக்ஷ்மி, ஸ்ரீமதி கமலாம்பாள் ஆகியோரையும் விட்டு சிவலோக பதவியை அடைந்தார். அன்னாருடைய மறைவு இந்நகரப் பொதுஜனங்களையும், உறவினர்களையும், தொழிலாளர்களையும் பெருந் துயரத்தில் ஆழ்த்தியது.

அவருடைய ஆத்மா சாந்தி அடைவதாக.



இமயமலையில் ஏழாயிரம் அடிக்கு மேலே இருக்கும் நமது 'பிக்கட்'டைப் பத்திரிகையாளர்கள் பார்வை யிட்டனர். அங்குள்ள ராணுவ அதிகாரிகள் சிலருடன் அகில இந்தியப் பத்திரிகையாளர்கள் தேநீர் அருந்துவதைப் படத்தில் காணலாம்.

லேயே ஒளிந்து கொள்ள முயலுகிறார்கள். அதற்கும் அந்த அழகியே உதவி செய்கிறாள்.

வளையல்காரர் அம்மி போல் இருக்கிறார். புடவைக்காரர் ஆட்டுக் கல் போல் மாறுகிறார். மைனர் மாவரைக்கும் யந்திரமாகச் சுற்றுகிறார்.

அதே சமயத்தில் அழகியின் கணவர் வீட்டுக்கு வந்து விடுகிறார். அம்மியும், ஆட்டுக் கல்லும், இயந்திரமும் அவர் கையில் படும் பாட்டை இப்பொழுது நினைத்தால்கூட வயிறு குலுங்கக் குலுங்கச் சிரிப்பு வருகிறது.

இந்த நாடகக் கதையை இந்திய சிப்பாய்கள் மிகத் திறம்பட நடித்துக் காட்டினார்கள். நிமிஷத்துக்கு நிமிஷம் சபையில் 'குபீர் குபீர்' என்று சிரிப்பு வெடிகள் கிளம்பும்படி மேடையிலிருந்து ஹாஸ்யக் குண்டுகளைத் தூக்கி எறிந்து கொண்டிருந்தனர் நடிகர்கள்!

இந்தக் கலை நிகழ்ச்சிகளில் முக்கியப் பங்கெடுத்து, அதற்கு உயிரும் உணர்ச்சியும் ஊட்டி வரும் சிப்பாய்கள் தமிழர்கள்தான் என்பதைக் கேட்டுத் தமிழ் மக்கள் எல்லோரும் பெருமை அடையலாம். இமயமலையின் சிகரங்களில்கூட, கலை வளர்க்கும் திருப்பணியிலும், சிரிப்பூட்டும் கலையிலும், சமாதான வளர்ச்சியிலும் உற்சாகத்துடன் ஈடுபடக்கூடிய பண்பு தமிழ் மக்களுக்குத்தானே இருக்கும்!

## மரணத்தின் வாசலிலே!

**ம**று நாள். நேயர்களை இப்பொழுது ரஜௌரியில் இருந்து ஐம்பத்து நாலு மைல்களுக்கு அப்பால் உள்ள பூஞ்ச் நகருக்கு அழைத்துச் செல்லப் போகிறேன். இது வரையில் இந்த யாத்திரையில் காணாத பயங்கரப் பாதைகளை இந்த ஐம்பத்து நாலு மைல் பிரயாணத்திலே காண முடிந்தது. வழியில் ஏழாயிரம் அடி உயரத்தில் உள்ள 'பிக்கட்' ஒன்றைப் பார்க்கும் சந்தர்ப்பம் கிடைத்தது. இந்த பிக்கட், அதாவது சமாதான எல்லைக் காவல்படை இருக்கும் இடம்—, பனிக் காலத்தில் பத்தடி உயரம் பனி மூடிக் கிடக்கும். சிப்பாய்களின் குடில்கள் எல்லாம் பனி மலைக்குள் புதைந்து விடும். ஆனாலும் அந்தப் பனிக் காலத்திலும் தோளில் துப்பாக்கியைச் சுமந்து கொண்டு நமது சிப்பாய்கள் எதிரிகள் இந்திய எல்லைக்குள் நுழைந்து விடாமல் பாதுகாத்து வருகின்றனர்.

இந்தப் பிக்கட் இருக்கும் இடமும் பாகிஸ்தான் கைக்குள் இருந்தது. இந்தக் குன்றுகளைத் திரும்பிப் பெற்று இந்திய எல்லையைப் பலப்படுத்தப் பாடுபட்டவர் சுபேதார் மேஜர் பீம்சந்த் அவர்கள். இவர் ராணுவத்திலேயே மிக உயர்ந்த கௌரவச் சின்னமான மகாவீர சக்கரம் இரண்டு பெற்றவர்.

ஏழாயிரம் அடி உயரத்துக்கு வந்துள்ள இந்தியப் பத்திரிகையாளர்களை அகமும் முகமும் மலர வரவேற்றார் மேஜர் பீம்சந்த்.

பத்திரிகையாளர் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் நிதானமாகப் பதிலளித்தார். பாரத நாட்டின் சுதந்திரத்தைப் பாதுகாக்கும் பொறுப்பு வாய்ந்த பத்திரிகைகளைச் சேர்ந்த பத்திரிகையாளர்கள்தான் சில விஷயங்களைப் பற்றித் தெரிந்து கொள்ளக் கேள்வி கேட்கிறார்கள் என்று தெரிந்திருந்தாலும் பீம்சந்த் வார்த்தைகளை அளந்து மிகுந்த நிதானத்துடன் பதில் கூறிய அவர் கடமை உணர்ச்சி இன்னமும் என் மனத்தில் பசுமையாக இருக்கிறது.

ஏழாயிரம் அடிக்கும் மேலே, மலையின் இரு புறத்திலும் நன்செய் வயல்கள் காட்சியளிக்கின்றன. எல்லாம் மாடிப்படிகள் போல ஒரு அடி அகலம் உள்ள வயல்கள். இமயமலை மீது மரகதப் போர்வையைப் போர்த்தி விட்டது போல் பச்சைப் பசேல் என்று அந்த வயல்கள் படிப்படியாக இறங்கியும் ஏறியும் இருந்தன. அப்பொழுது அடித்த காற்றில் பயிர்கள் இலேசாக ஆடி அசைந்த போது அந்த இடம் புது எழிலுடன் திகழ்ந்த காட்சியைப் பார்ப்பதற்குப் பதினாயிரம் கண்கள் வேண்டும்.

ஏழாயிரம் அடிக்கு மேல் இருக்கும் இந்த பிக்கட் உள்ள இடத்துக்குச் செல்லும் பாதையைப் பற்றி ஒரு வார்த்தை. மலை மீது செங்குத்தாகப்போகும் சீர்திருத்தம் செய்யப்படாத கச்சா சாலைகள். இந்தச் சாலையில் அடிக்கடி பயங்கரமான நாம வளைவுத் திருப்பங்கள். இந்தச் செங்குத்தான சாலையின் இரு புறத்திலும் குனிந்து பார்த்தால் குடல் வாய்க்கு வந்து விடுவது போன்ற பயம் பற்றிக் கொள்கிறது. இரண்டாயிரம் அடி, மூவாயிரம் அடி ஆழமுள்ள பள்ளங்கள். அந்தச் சாலையிலே பத்திரிகையாளர்கள் அமர்ந்துள்ள ஜீப் வண்டிகள் போகின்றன. அதன் சக்கரங்கள் மட்டும்தான் சாலையில் இருக்கின்றன. அதற்கு மேல் சாலை அகலமில்லை. சக்கரத்துக்கு வெளியே உள்ள ஜீப் வண்டியின் பாகம் இரண்டாயிரம் அடி ஆழமான பள்ளத்தில் அந்தரமாக இருக்கிறது. இந்த இடங்களில் நாலு சக்கரங்களையும் ஒரே சமயத்தில் இயக்கிக் கொண்டு வரும் வண்ணம் ஜீப் வண்டிகளை ஓட்

க் கொண்டு வரும்படி டிரைவர்களுக்கு உத்தரவு கொடுத்துக் கொண்டே இருந்தார்கள்.

நாலு சக்கரங்களையும் இயக்கி ஓட்டுவது என்றால் என்ன! சாதாரண மோட்டார் வண்டிகள் சேற்றிலோ, மழையிலோ சிக்கிக் கொண்டால் அங்கிருந்து கிளம்ப முடிவதில்லை. காரணம் அதன் இயந்திரங்களால் நாலு சக்கரங்களையும் ஒரே சமயத்தில் இயக்க முடியாது. இரண்டு சக்கரங்களை மட்டும் தான் இயக்க முடியும். அதனால் கார் கிளம்ப முடியாது. ஏற்றமான இடங்களிலும், இறக்கமான இடங்களிலும் சாதாரணக் கார்களை நம்பிப் போக முடியாது.

ஜீப் வண்டிகள் அப்படிப்பட்டவையல்ல. நாலு சக்கரங்களையும் ஒரேசமயத்தில் இயக்கிச் சுழற்றி ஓட்டும் வசதி படைத்த இயந்திரங்கள் பொருத்தப்பட்டவை. அதனால் ஒரு சக்கரம் சரியாக இயங்கா விட்டாலும் மற்ற மூன்று சக்கரங்களும் இயங்கி எப்படிப்பட்ட சாலையிலும் அனாயாசமாக ஓடும் சக்தி உடையவை. ஆகையால் ஜீப் வண்டியின் நாலு சக்கரங்களையும் ஒரே சமயத்தில் இயக்கும் முறையில் வண்டியை மிகுந்த கவனத்துடன் ஓட்டிக் கொண்டு மேலே சென்றார்கள்.

எப்படியோ தைரியமாக ஜீப் வண்டியில் பத்திரிகையாளர்கள் உட்கார்ந்திருந்தாலும், வழியில் தென்படும் நாம வளைவுத் திருப்பங்களில் ஜீப் வண்டி திரும்பும் போது ஜீப் வண்டிகளில் இருந்தவர்கள் மரணத்தின் வாசல் வரையில் செல்லும்படி யாகிவிட்டது. அந்தச் சமயங்களில் பலர் இறுதிப் பிரார்த்தனை செய்ய ஆரம்பித்து விட்டனர். "ராம ஜயம்! ராம ஜயம்!" என்று உச்சரித்தவர்களும், "நமசிவாயம்! நமசிவாயம்!" என்று ஜபித்தவர்களும், "அல்லா! அல்லா!" என்று அழைத்தவர்களும் அப்படியே இரண்டு கண்களையும் மூடிக் கொண்டு இஷ்ட தெய்வங்களை வாய் விட்டுப் பிரார்த்தித்தவர்களும், மலையின் உச்சியில் ஏறியவுடன் மிகுந்த தைரியசாலிகளைப் போலவே நடந்தனர். "வழியில் ரொம்பவும் பயந்து போனீர்களோ?" என்று கேட்ட போது கைகளும் உதடுகளும் தாளம் போட 'நான் பயப்பட வில்லை' என்று கூறிய பத்திரிகையாளர்களைப் பார்த்து ராணுவ அதிகாரிகள் புன்முறுவல் பூத்தார்கள். அந்தச் சமயத்தில் பத்திரிகையாளர்களின் முகங்களில் தோன்றிய அபூர்வ பாவங்கள் இனி எந்த ஜன்மத்திலும் காண முடியாத காட்சிகள்!

இந்தச் சமயத்தில் என் பிரயாணம் ஆரம்பமாவதற்கு முன்பு நடந்த ஒரு சம்பவம் நினைவுக்கு வந்தது. வட இந்திய யாத்திரைக்குக் கிளம்புவதற்கு முதல்நாள் இரவு ஆசிரியர் சோமு என்னை அவசரமாகக் கூப்பிட்டனுப்பினார். என்னமோ ஏதோ என்று அவசரம் அவசரமாகச் சென்றேன்.

"நீண்ட நெடுந் தூரம் யாத்திரை செய்யப் போகிறீர், நமது தலைவர் ராஜாஜி அவர்களைப் பார்த்து அவர் ஆசி பெற்றுச் செல்வது நல்லதல்லவா!" என்றார்.

"காத்துக் கொண்டிருக்கிறேன்" என்றேன்.

உடனே என்னை அழைத்துக் கொண்டு ராஜாஜியின் இல்லத்துக்குச் சென்றார்.

ராஜாஜி அவர்களிடம் போய் "ஆசி கூற வேணும்" என்று வணங்கினேன்.

"என்ன பெரிய 'அட்வென்ச்சரா' செய்யப் போகிறாய்!" என்று அவர்களுக்கே உள்ள இயற்கையான இயல்புடன் கேட்டுப் புன்முறுவலுடன் ஆசி கூறினார்கள்.

ராஜாஜி அவர்கள் அட்வென்ச்சரா' செய்யப் போகிறாய் என்று சொன்னது, அதாவது வீர சாகஸங்களையா செய்து வரப் போகிறாய் என்று கேட்டதின் உட்பொருளை அப்பொழுது என்னால் விளங்கிக் கொள்ள முடியவில்லை.

யாத்திரையில் இப்படிப் பல 'அட்வென்ச்சர்'கள் ஏற்படும் என்பதை எனக்கு உணர்த்தாமல் உணர்த்திய ராஜாஜி அவர்களின் தீர்க்க திருஷ்டியை அபாயம் நிறைந்த இடங்களில், உண்மையான வீர சாகஸங்கள் நிறைந்த, மரண வாசலையே எட்டிப் பிடிக்கும்படியான பயங்கரமான இடங்களில் பிரயாணம் செய்யும் போதெல்லாம் எண்ணி எண்ணி வியந்து போனேன். அந்த உத்தமப் பெரியார் எனக்கு அளித்த ஆசீர்வாதத்தின் சக்தியால் அகில இந்தியப் பத்திரிகையாளர் எல்லாருமே எந்த வித அபாயமும் இல்லாமல் பல 'அபாயமான இடங்களையும் கடந்து விட்டுத் திரும்பினோம்.

## ராணுவத்தின் சேவை

நமது ராணுவ வீரர்கள் அங்கு எல்லையைப் பாதுகாப்பதுடன் நிற்கவில்லை என்பதை வழியில் இருந்த மெந்தட் கிராமத்துக்குள் சென்று தெரிந்து கொள்ள முடிந்தது. எந்த விதமான வசதியும் இல்லாத இடங்களில், மலைகளின் சரிவில் இருக்கும் கிராமங்களில் வாழும் மக்களுக்கு இந்திய ராணுவத்தினர் அருமையான சேவை செய்து வருகிறார்கள். அவர்கள் அமைதியாக வாழ்வதற்கு வழி செய்து கொடுத்திருக்கிறார்கள். அவர்களுக்கு வைத்திய உதவி செய்து கொடுத்து அவர்களை நோய் நொடிகளில் இருந்து காப்பாற்றி வருகிறார்கள். எந்தக் காலத்திலுமே வைத்திய உதவி பெற்று மகிழ முடியாமல் இமயமலையின் மீதுள்ள கிராமங்களில் வசித்து வரும் மக்களுக்கு இந்திய ராணுவம் தான் இன்று வைத்திய வசதி அளித்து வருகிறது.

மெந்தட் கிராமத்தில் 1953-ம் ஆண்டு மே மாதம் 23ந் தேதி ஒரு ராணுவ ஆஸ்பத்திரி ஆரம்பித்து அதன் மூலம் அங்குள்ள ஏழை எளிய மக்களுக்கு நமது ராணுவம் தொண்டாற்றி வருகிறது. நாள் ஒன்றுக்கு அறுபது எழுபது பேர் வீதம் அந்தக் கிராமத்திலும், அதைச் சுற்றியுள்ள கிராமத்திலும் இருந்து வந்து வைத்திய உதவி பெற்றுப் போகின்றனர்.

நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வமல்லவா! எந்தவித உதவியும் இல்லாத மக்களுக்கு வைத்திய உதவிசெய்து அவர்களுடைய நோயைப் போக்கப் பாடுவதைவிடச் சிறந்த சேவை வேறு என்ன இருக்கிறது!

** ** **

நேயர்கள் ஜம்முவில் உள்ள முக்கியமான ராணுவ கேந்திரங்களின் பெரும் பகுதியைப் பார்த்தாகிவிட்டாலும், அடுத்தாற்போல் நாம் பார்க்கப் போகும் பூஞ்ச் நகரம் யுத்தத்தில் மிக முக்கியமாக விளங்கிய பிரசித்தி பெற்ற நகரம். இதோ ஜீப் வண்டிகள் வந்து விட்டன. பிரயாணத்துக்குத் தயாராக இருங்கள், புறப்படுவோம். (தொடரும்)

# ஊக்கம் சக்திக்கு

வேலை செய்யும் இடத்தில்

விளையாட்டு மைதானத்தில்

கடுமையான வேலை, தீவிரமான விளையாட்டு, மற்றும் அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான பூரண சக்தி பெற உங்கள் உணவுடன் ஏதாவது அதிகப்படி போஷாக்கைச் சேர்த்துக்கொள்ளுங்கள். ஏதாவது ஒரு ருசிகரமான, பரிபூரண சத்து மிகுந்த ஒரு பானம்.......அது தான் ஓவல்டின்! சந்தோஷமும், சுறுசுறுப்பும் மிகுந்த உங்களுக்கு இது இன்றியமையாததோர் ஊக்கம் ஊட்டும் பானமாகும்.

விநியோகஸ்தர்கள்:
கிரஹாம்ஸ் ட்ரேடிங் கோ.,
(இந்தியா) லிட்.




அருந்துங்கள் ருசிகரமான

# ஓவல்டின்

ரேடியோ சிலோனிலிருந்து ஓவல்டின் அமெச்சூர் நேரங்களை கேளுங்கள்
(ஷார்ட்வேவ்-41.72 மீட்டர்கள்), சனிக்கிழமைகள் இரவு 8 முதல் 8-30 மணி.
(இன்விசிஷ்-9520 கிலோசைகிள்ஸ் 31 மீட்டர்கள்)
ஞாயிறுகள் இரவு 8 முதல் 8-30 வரை

IV. 460

# நறுமணம் விரும்புகிறவர்களுக்கு...

மைசூர் சந்தன சோப்பினுல் ஸ்னானம் செய்வதே ஓர் அலாதியான இன்ப அனுபவம். அதன் மிருதுவான நுரை சருமத் துவாரங்களிலும் ஊடேறி சுத்தம் செய்து, சருமத்தை மழமழப்பாகவும் பளபளப்பாக வும் பட்டுப்போல் செய்கிறது. அதன் இன்பமூட்டும் ரம்மியமான மணம் உங்கள் தேக முழுவதும் பல மணி நேரம் நீடித்துப் பரிமளிக்கும்.

## மைசூர்
## சந்தன
## சோப்




## கவர்ன்மெண்ட் சோப் பேக்டரி, பெங்களூர்

இந்திய சோப், வாசனைப் பொருள்கள் உற்பத்தியாளர் சங்கத்தின் அங்கத்தினர்

# JUPITER GENERAL
# INSURANCE COMPANY LIMITED

Estd.  1919


| | | | | |
|---|---|---|---|---|
| **Capital Subscribed** | ... | ... | Rs. | 1,50,00,000 |
| **Capital Paid Up** | ... | ... | Rs. | 23,74,800 |
| **Total Assets** | ... | ... | Rs. | 3,50,00,000 |

**INSURANCE OF EVERY DESCRIPTION UNDERTAKEN**

**Head Office: BANK STREET - BOMBAY-1**

Principal Office for South India:

**"JUPITER HOUSE", 167, BROADWAY, MADRAS-1**

BRANCHES AND AGENCIES THROUGHOUT INDIA AND IN PAKISTAN, BURMA, CEYLON ADEN AND AFRICA

# ரகுபதி  ராகவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

## 18

சிலர் எண்ணுகிறார்கள், சொல்லியும் வருகிறார்கள், கடவுள் என்கிற தத்துவம் மனிதனுடைய கற்பனையே என்று. மனிதனுடைய சிந்தனையில் தான் ஆண்டவன் தோன்றினான் என்று அவர்களுடைய வாதம். இந்த வாதத்தை ஒப்புக் கொண்டால் கடவுள் மட்டுமே அல்ல, உலகத்தில் எந்தப் பொருளுமே மனிதனுடைய உள்ளத்தில் தோன்றிய ஒரு தோற்றமாகும். பூத உலகில் பிண்டமாகத் தோற்றம் காட்டும் ஒவ்வொரு பொருளும் உண்மையில் நம் உள்ளத்தில் தான் நிற்கிறது. அனைத்தும் நம்முடைய மனத்தில் உண்டான கற்பனையும் பாவமுமே என்று வைத்துக் கொள்ள வேண்டியதாகும். ஒரு மரம் நம் முன் நிற்பதற்கு நம்முடைய மனத்தைத் தவிர்த்து வேறு என்ன சான்று உண்டு? பஞ்சேந்திரியங்களினால் மரம் இருப்பதைக் காண்கிறோம். அந்த இந்திரிய உணர்ச்சி நம் மனத்துக்குள் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சியே அல்லவா? எவ்விதப் பிரமாணமும் முடிவில் மனிதனுடைய உள்ளத்தில் நிகழும் நிகழ்ச்சியே அன்றி வேறில்லை. ஆனபடியால் கடவுள் இருப்பது நம்முடைய உள்ளத்துக்குள்தான் என்றால் பூத உலகம் அனைத்துமே நம் உள்ளத்துக்குள்தான் நிற்கிறது. இப்படி வைத்துக் கொண்டாலும் சேதனர்களாகிய நாம், நம்முடைய உணர்ச்சியில் எது பிண்டமாகத் தோன்றுகிறதோ, எது உண்மையாகத் தோன்றுகிறதோ, எது வெளியுலகத்தில் ஒரு பொருளாகத்தோன்றுகிறதோ அதை உண்மையாகவே வைத்துக் கொண்டுதான் வாழ்க்கை நடத்த வேண்டும். இது ஒரு மரத்திற்கும் பொருந்தும், ஒரு வீட்டுக்கும் பொருந்தும், மகனுக்கும் பொருந்தும், விரோதிக்கும் பொருந்தும். கடவுளுக்கும் பொருந்தும். உண்மையென்று நாம் வைத்துக் கொண்டிருப்பது எதுவும் அந்த அளவிலேதான் உண்மை. நம்முடைய மனத்தைத் தவிர உண்மையை அறிய வேறு சாதனம் கிடையாது. மனத்தைத் தாண்டிச் சென்று ஒரு அத்தாட்சி பெற முடியாது.

ஆகையினாலேதான் என்னுடைய அந்தராத்மாவின் உண்மை என்னுடைய தேகத்தின் உண்மையைப் போன்றதே என்று வைத்துக் கொண்டு வருகிறேன். ஏன், என்னுடைய தேகத்தின் உண்மையைக் காட்டிலும் நிச்சயமாகவே நான் என் அந்தராத்மாவில் கேட்கும் குரல் எனக்கு உண்மையாகும். அது என்னை எப்போதும் பொய்த்ததில்லை. ஏன், மற்றவர்களுக்கும் அது பொய்யாகவில்லை.

மேலும் சொல்கிறேன்: உண்மையில் தம் அந்தராத்மாவின் குரலைக் கேட்கவிரும்புகிறவர்கள் எவருக்குமே அந்த ஒலி கேட்காமல் போகாது. ஒவ்வொருவனுடைய உள்ளத்திலுமே அது பேசுகிறது. நம்முடைய செவிட்டுத்தனத்தை நாம் குறைத்துக் கொள்ள வேண்டும். அதற்கு அப்பியாஸம் வேண்டும். [ஹரிஜன் 8—7—33]

இதில் பிரமை ஒன்றும் இல்லை. என்னை நான் ஏமாற்றிக் கொள்ளவில்லை. அனைவரும் செய்து பார்த்துச் சோதித்துக் கொள்ளும்படியான உண்மை. மனம் இணங்க வேண்டும். பொறுமை வேண்டும். இதற்கு வேண்டிய அதிகாரத்தை, தகுதியை அடைவதற்கு உறுதியான எண்ணமும், சாந்தமும், பொறுமையும் வேண்டும். அதுவும் கஷ்டமல்ல. ஆனால் உண்மை வேட்கை வேண்டும், தாகத்துக்குத்

**ராஜாஜி**

தண்ணீர் விரும்புவது போல் விரும்ப வேண்டும். வேறொருவரை நீங்கள் நம்ப வேண்டியதில்லை, உங்களை நீங்கள் நம்பினால் போதும். உங்களுடைய அந்தராத்மா பேசுவதற்கு நீங்கள் காது கொடுக்க வேண்டும். அந்தராத்மா என்கிற பேச்சை விரும்பாவிடில் உங்களுடைய பகுத்தறிவு என்றே வைத்துக் கொள்ளுங்கள். உங்கள் அறிவு உங்களுக்கு என்ன சொல்லுகிறதோ அதைக் கேளுங்கள். கடவுளை வேண்டாதவர்கள் கடவுள் என்கிற பெயரை விட்டு விடலாம். ஆனால் அதற்குப் பதில் வேறொரு சொல்லைத் தேடியே தீர வேண்டும். முடிவில் அந்தச் சொல்லும் கடவுளாகவே முடிந்து தீரும். பிரபஞ்சத்தில் கடவுளைத் தவிர வேறொன்றில்லை என்பதினால் அல்லவோ இப்படி முடியும்!

இன்னும் ஒப்புக் கொள்ளுகிறேன்: தம் அந்தராத்மா இப்படிச் சொல்லுகிறது என்று பலர் வேஷம் போடலாம். வேஷம் போடுகிறவன் ஒவ்வொருவனும் அந்தராத்மாவைக்கண்டு பேசியவன் அல்ல என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். சிலர் வேஷதாரிகளாக இருக்கலாம். அல்லது தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொண்டு மோசமும் போயிருக்கலாம். எதற்குமே முயற்சியும் பயிற்சியும் வேண்டும். பலர் முயன்று சிலரே வெற்றி பெறுவார்கள். அப்படி வெற்றி பெற்ற சிலரை நாம் அடைவதற்கு, வெற்றி பெறாதவர் பலரைப் பொறுத்துத்தான் வரவேண்டும்.

பொய்யன் ஒருவன் "எனக்கு ஆண்டவன் சொன்னான்" அல்லது "என் அந்தராத்மாவின் உத்தரவு இது" என்று மக்களை மோசம் செய்தால் தப்பிப் போக மாட்டான். ராஜாவின் உத்தரவின்றி ராஜாவின் பெயரைச் சொல்லி ஏமாற்றினவன் என்ன பாடு படுவானோ, அதற்கும் மேல் அந்தராத்மாவின் பெயரைச் சொல்லி மோசம் செய்தவன் படுவான். சந்தேகமில்லை, அவன் அடையும் தண்டனை பெருந் தண்டனையாகும்.

சாதாரண மோசக்காரர்கள் அடையும் தண்டனை உடலைப் பொறுத்தது. இந்த மோசக்காரன் அடையும் தண்டனை ஸர்வ நாசம் ஆகும். கதியற்ற நிலை யடைவான்.

என்னைப் பற்றிக் குற்றம் சொல்லுகிறவர்கள் என்னிடம் அவர்கள் வைத்திருக்கும் அன்பினால், என்னை மோசக்காரன் என்று சொல்லவில்லை. பிரமை என்று சொல்லுவார்கள். என்னைப் பொறுத்தமட்டில் இரண்டும் ஒன்றே. வெறும் பிரமையாக இருந்து அதைப் பின்பற்றி நடந்தேனானால் அது மோசத்தைப் போலவே ஆகும். அடக்கத்துடனும் பயத்துடனும் மிக ஜாக்கிரதையாக ஒருவன் நடந்து கொள்ள வேண்டும், ஆண்டவனுடைய அருளைப் பெறுவதற்கு. அகங்காரத்திலும் பிரமையிலும் சிக்கிக் கொள்ளாமல் அவனுடைய அருளைப் பெற்று அவனுடைய குரலைக் கேட்கும் தகைமை பெற வேண்டுமானால் ஒருவன் தன்னை முழு சூன்யமாக்கிக் கொள்ள வேண்டும். இதற்கு மேல் நான் என்ன சொல்வேன்!

[பம்பாய் க்ரானிகிள் 18—11—33]

கல்கியின்

# அமரதாரா




## நாலாம் பாகம்

## வாழ்வு மலர்ந்தது

மணியம்

## அத்தியாயம்-1

# தாய் நாட்டின் தரிசனம்

அமைதியான கடலைக் கிழித்துக் கொண்டு கப்பல் சென்று கொண்டிருந்தது. இன்பமாகக் காற்று வீசிக் கொண்டிருந்தது. ஆதவன் தன் நீண்ட யாத்திரையை முடித்துக் கொண்டு கடலில் இறங்கிக் கொண்டிருந்தான். பாதி தெரிந்த சிவந்த தங்கத் தாம்பாளம் போன்ற சூரியனின் கதிர்கள் கடலின் நீல நிறத்தைப் பற்பல வர்ணங்களாக மாற்றி இந்திர ஜால வித்தை செய்து கொண்டிருந்தன.

இதோ, சூரியன் மறைந்து விடப் போகிறது. அதன் விளிம்புதான் தெரிகிறது. இப்போது அதுவும் மறைந்து விட்டது. வானத்தில் அவன் இருந்ததற்கு அடையாளமாகச் செந்நிறம் மட்டும்தான் இருக்கிறது. அதுவும் மங்கிக் கொண்டே வந்தது.

நான் கப்பலின் மேல் தளத்தில் நின்று கொண்டிருந்தேன். வானம் துல்லியமாகக் காட்சி அளித்தது. 'பம்பாய்த் துறைமுகம் போய்ச் சேர இன்னும் இரண்டு நாட்கள்தான் இருக்கின்றன' என்று மனம் திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டிருந்தது. 'அங்கிருந்து நேரே வங்காளத்தில் போய் வேலையை ஒப்புக் கொள்ள வேண்டியது. உடனே குங்குமத்துறைக்குப் போய் என் இந்துவைப் பார்க்க வேண்டும். இப்போது இந்து எப்படி இருப்பான்? இன்னும் உயரமாகியிருப்பாளா? அப்படியே இருப்பாளா? என்னைப் பார்த்ததும் என்ன செய்வான்? மகிழ்ச்சியோடு சிரிப்பாளா? அல்லது உணர்ச்சிப் பிரவாகத்தினால் கண்ணீர் விடுவாளா? "நீங்கள் வாக்குறுதி கொடுத்ததை இத்தனை நாட்களாக மறந்துவிட்டுத்தானே இருந்தீர்கள்?" என்று குற்றஞ் சாட்டுவாள்.

"மறந்திருந்தால் வந்திருப்பேனா இந்து? உனக்கு நான் கூறியது ஞாபகமிருக்கிறதா?" என்று கேட்பேன்.

"நீங்கள் கூறியதை என்னால் மறக்க முடியுமா?" என்பாள் இந்து. இந்துவின் அழகிய கண்கள்...!

அந்தச் சமயத்தில் ரகு என் முன்னால் வந்து நின்று சிந்தனையைக் கலைத்தான். அப்போதுதான் நன்றாக இருட்டி விட்டதென்பதும், பரிசுத்தமான வானத்தில் கோடிக்கணக்கான வைரங்களை வாரி இறைத்தது போல் நட்சத்திரங்கள் பளிச்சென்று மின்னுவதும் என்னுடைய கண்களுக்குப் புலப்பட்டன.

"பம்பாய் போய்ச் சேர இன்னும் இரண்டு நாட்கள்தான் இருக்கின்றன" என்றான் ரகு.

"நானும் அதையேதான் நினைத்துக் கொண்டிருந்தேன்!"

"எப்படியோ தப்பிப் பிழைத்து உயிரோடு வந்து சேர்ந்து விட்டோம். வழியில்தான் எத்தனை ஆபத்துக்கள் ஏற்பட்டன? நீர் மூழ்கிக் கப்பல் தொடர்ந்து வருகிறது என்று பத்து நாட்களுக்கு முன்பு அறிவிக்கப்பட்ட போது நாம் ஊருக்குப் போய்ச் சேர்ந்து விடுவோமென்ற நம்பிக்கையை நான் அடியோடு இழந்து விட்டேன்!"

"நான் என்ன நினைத்தேன் தெரியுமா? உலகத்தில் நாம் பட்ட கஷ்டங்களுக்கு முடிவு வந்து விட்டதென்றும் கடலில் மூழ்கினால் கடலின் ஆழத்திலுள்ள அழகிய முத்துக்கள், நவரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட குகைகளில் வசிக்கும் மச்ச கன்னிகளுடன் ஆனந்தமாய்க் காலம் கழிக்கலாம் என்றும் நினைத்தேன்!"

"போதுமே உன் கற்பனை! எனக்கு இதெல்லாம் அலுத்துப் போய் விட்டது. பெரிய கவிகள் எல்லாம் இப்படிக் கற்பனை செய்தால் கவிதைகளாவது எழுதுவார்கள். நீ கற்பனை செய்வதனால் என்ன லாபம்?"

"இந்த எண்ணத்தினால் தோன்றும் சந்தோஷம் தான் லாபம். அது போதாதா? நீ கலீல் கிப்ரானின் 'மச்ச கன்னிகள்' என்ற கதையைப் படித்திருக்கிறாயா?"

"நான் அவருடைய பெயரைக் கூடக் கேள்விப் பட்டதில்லை."

"எனக்குக் கூடத் தெரியாது. ஐ. ஸி. எஸ். முதல் பரீட்சையின் போது என்னைக் கேள்வி கேட்டார்களல்லவா? அப்போது 'கலீல் கிப்ரான்' என்பவர் யார் என்று கேட்டார்கள். எனக்கு அப்போது அவரைப் பற்றி ஒன்றுமே தெரியாது. ஆனால் பெயரின் உச்சரிப்பைக் கேட்ட போது ஒரு அரேபியப் பெயர் மாதிரி இருந்தது. ஆகவே 'அரேபியா தேசத்துக் கவி' என்று

சொல்லி வைத்தேன். பின்னால் அது உண்மையென்று தெரிந்து ரொம்பச் சந்தோஷமாக இருந்தது!''

"உன்னைச் சமயத்தில் காப்பாற்றின அவருக்கு நன்றி செலுத்துவதற்காக அவருடைய நூல்களையெல்லாம் வாங்கிப் படித்தாயாக்கும்?''

"ஆமாம். உனக்குக் கூட அவருடைய நூல்கள் ரொம்பப் பிடிக்கும். அவரும் உன்னைப் போலவே யுத்தங்களை அடியோடு வெறுக்கிறார்.''

"உண்மையாகவா? அப்படியானால் நீ அந்தக் கதையைச் சொல்லு.''

நான் கையிலிருந்த புத்தகத்தைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தேன்.

"ஆழ்கடலுக்கு அடியில் முத்துக்கள் குவிந்திருக்கும் இடத்தில் ஒரு இளைஞனின் உடல் கிடந்தது. அதைச் சுற்றித் தங்க நிறமான கேசத்தை உடைய



சில மச்ச கன்னிகள் உட்கார்ந்து பரிதாபமாகப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

ஒரு கன்னி, 'இந்த மனிதன் நேற்று கடல் கொந்தளித்துக் கொண்டிருந்த போது இங்கே வந்து சேர்ந்தான்' என்று மொழிந்தாள்.

இன்னொரு கன்னி, 'இல்லை. கடவுளின் சந்ததியார்கள் என்று தன்னைச் சொல்லிக் கொள்ளும் மனிதர்கள் யுத்தம் செய்து கொண்டிருந்தார்கள். அதனால் நமது கடல் கூட ஒரே செந்நிறமாகி விட்டது. இவன் அந்த யுத்தத்தில் பலியானவன்' என்றாள்.

மற்றொரு கன்னி, 'எனக்கு யுத்தமென்றால் என்னவென்று தெரியாது. ஆனால் மனிதன் பூமியையெல்லாம் வென்று விட்டுக் கடலையும் வெல்ல வேண்டுமென்று பேராசைப் பட்டான். அதனால் நமது கடலரசனுக்குக் கோபம் வந்து விட்டது. அவனைச் சமாதானப் படுத்துவதற்காக மனிதன் நிறையப் பலிகளையும் நிறையச் செல்வங்களையும் கடல் அரசனுக்கு அளித்தான். நமது கொடூர இதயமுள்ள பேரரசருக்கு மனிதனால் அளிக்கப்பட்ட காணிக்கை இந்த யுவன்' என்றாள்.

எல்லோரும் அவன் அருகில் சென்று அவனைப் பரிசோதித்தார்கள். அவனுடைய பையில் ஒரு கடிதம் இருந்தது. அதைப் படிக்கத் தொடங்கினார்கள்.

'என் அன்பே!

நள்ளிரவு மறுபடியும் வந்து விட்டது. ஆனால் எனக்கு என் கண்ணீரைத் தவிர வேறு ஆறுதல் கிடையாது. யுத்தத்திலிருந்து நீங்கள் திரும்பி வருவீர்கள் என்ற நம்பிக்கையைத் தவிர எனக்கு ஆதரவாக ஒன்றுமே இல்லை.

எனக்கு என்ன கூறுவதென்றே தெரியவில்லை. பிரிவினால் அவஸ்தைப் படும் என் ஆத்மா, துன்பத்தையே ஒரு இன்பமாகவும், துயரத்தையே ஒரு ஆனந்தமாகவும் செய்ய வல்ல அன்பினால் ஆறுதல் பெற்று வருகிறது. நம் இதயங்களைக் காதல் பிணைந்த பொழுது, இறைவன் நம் இதயங்களை ஒன்றாக்கி விடும் நாளை நாம் எதிர்பார்த்துக் கொண்டிருந்த பொழுது, யுத்தம் தன் பயங்கரக் குரலால் உங்களை அழைத்துக் கொண்டு போய் விட்டது. கடமையை உத்தேசித்து நீங்கள் சென்று விட்டீர்கள்.

அன்பினால் பிணைந்த காதலர்களைப் பிரிக்கும் கடமை என்பது என்ன! பெண்களை நிராதரவாகவும், குழந்தைகளை அனாதைகளாகவும் செய்து விடும் கடமை யாது? அற்ப விஷயங்களுக்காகச் சாம்ராஜ்யங்களையே அழிக்கும் தேச பக்தி என்பது என்ன? ஒரு உயிருக்கு முன்னால் எந்தக் காரணம் தான் பெரிதாக இருக்க முடியும்?

கிராமத்து ஏழை மக்களைக் கடமை என்னும் பெயரால், அவர்களை அடக்கி ஆளும் வர்க்கத்தார் தங்களுடைய புகழுக்காக மடியச் செய்கிறார்களே! அது என்ன கடமை? தேசங்களுக்கு மத்தியிலுள்ள அமைதியைக் கடமை குலைத்து விடுகிறதென்றால், மனித வாழ்க்கையின் புனிதத் தன்மையைத் தேசபக்தி கலைத்து விடுகிறதென்றால், 'கடமைக்கும், தேச பக்திக்கும் சாந்தி கிடைப்பதாக.'

இல்லை. இல்லை. என் அன்பே! என் வார்த்தைகளைக் கவனிக்காதீர்கள். உங்கள் தேசத்துக்கு நீங்கள் உண்மையாக இருங்கள். தைரியமாக இருங்கள். காதலினால் குருடாகி விட்ட, தனிமையினால் தன்னையே இழந்து தவிக்கும் ஒரு

பெண்ணின் வார்த்தைகளைப் பொருட்படுத்தாதீர்கள். என் காதல் உங்களை இந்த ஜன்மத்தில் என்னிடம் சேர்ப்பிக்கா விட்டாலும், அடுத்த ஜன்மத்தில் கட்டாயம் சேர்த்து வைத்து விடும்.'

கடல் கன்னிகள் அந்தக் கடிதத்தை அவனுடைய சட்டையிலேயே வைத்து விட்டுத் துயரத்துடன் சத்தம் செய்யாமல் நீந்திப் போய் விட்டனர்.

சற்றுத் தூரத்துக்கப்பால் சென்றதும் ஒரு கன்னி, 'மனித இதயம் நமது கடல் அரசனுடைய கொடூரமான இதயத்தை விட இன்னும் கொடூரமானது' என்று கூறினள்.''

ரகு மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தான். எனக்கே உணர்ச்சி மிகுதியினல் தொண்டையில் கரகரப்பு உண்டாயிற்று. அந்த வீரனுக்கு அவனுடைய காதலி எழுதிய கடிதம் எனக்கு இந்துவால் எழுதப்பட்டதாகவே தோன்றியது. ஆம்! இந்து அப்படித்தான் எழுதி யிருப்பாள். நான் யுத்த சமயத்தில் லண்டனில் இருக்க நேர்ட்டதை இனிமேல் கேட்டால் கூடப் பயப்படுவாள். இப்போதே என்னவெல்லாம் எண்ணிக் கொண்டிருக்கிருளோ? இங்கிலாந்தில் யுத்தம் நடக்கிறதென்ற விஷயம் தெரிந்து தானே இருக்கும். பாவம்! எனக்கு என்ன ஆயிற்றென்று தெரியாமல் தவியாய்த் தவித்துக் கொண்டுதான் இருப்பாள். அதை நினைத்த போது என் கண்கள் கூடக் கலங்கி விட்



டன. சாதாரணமாக எனக்குக்கண்ணீரே வராது. ஆனால் ரகுவுக்கு அக் கதையைப் படித்துக் காட்டிய போது உணர்ச்சிப் பிரவாகத்தில் மூழ்கி விட்டேன்.

அந்தனை நாட்கள் பொறுத்திருந்த போதெல்லாம் அவ்வளவு கஷ்டமாக இல்லை. இந்தியாவை அடைய இன்னும் இரண்டு நாட்கள் இருக்கிறதே என்று கோபம் கோபமாக வந்தது. என்னால் ஆவலைக் கட்டுப்படுத்திக் கொள்ளவே முடியவில்லை. கப்பலில் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தேன்.

கடைசியாகப் பம்பாய்த் துறைமுகமும் வந்தது. எண்ண அலைகள் ஒன்றின் மேல் ஒன்றாய் முட்டி மோதிக்கொண்டு வர, ஒருவாறு கரையை அடைந்தேன். அங்கிருந்து வங்காளத்துக்குச் சென்று முதலில் வேலையை ஒப்புக் கொண்டேன். பிறகு ஒரு மாதம் விடுமுறை பெற்றுக் கொண்டு குங்குமத்துறைக்குக் கிளம்பினேன்.

ரயில் ஆமை வேகத்தில் ஊர்ந்து சென்றது. என் நெஞ்சின் வேகத்துடன் அதனால் போட்டியிட முடியவில்லை. விளக்குக் கம்பங்களிலிருந்து ஒளி. ரயில் பெட்டிக்குள் விழுந்து விழுந்து மறைந்து கொண்டிருந்தது. சற்று ஒளி· பிறகு இருள். மறுபடியும் ஒளி. இப்படி மாறி மாறி வந்து கொண்டிருந்தது. என் மனம் அதை மனித வாழ்க்கைக்கு ஒப்பிட்டுப் பார்த்தது.

ஒளியும் இருளும் வாழ்க்கையில் மாறி மாறித்தான் வருகின்றன. இதை உலகம் தோன்றின நாள் முதல் மனித குலம் அறிந்து கொண்டுதான் வந்திருக்கிறது. இருந்த போதிலும் துன்பம் வரும்போது அலறி அழுதும், இன்பம் வரும்போது பேசிச் சிரித்தும் அதைப் பலமடங்கு அதிகமாக்கிக் கொள்கிறோம்.

இப்படி எண்ணிக் கொண்டே நான் தூங்கிப் போயிருக்க வேண்டும். திடீரென்று என் கண் முன்னால் வீடுகள் பற்றி எரிந்தன. அவற்றினிடையே நான் ஓடி வருகிறேன். நெருப்பைப் பலர் அணைக்கிறார்கள். ஒரே குழப்பம். நெருப்பு அணைந்ததும், குப்பைகளையும், கற்களையும் அகற்றுகிறேன். ஐயோ! அது யாருடைய கை? அந்தச் செங்கற் குவியலின் அடியில் இந்துவின் கரமல்லவா? நான் ஓடிச் சென்று கற்களை அகற்றுகிறேன். கைகள் சோர்ந்து போகின்றன. 'இந்து! இந்து!' என்று அலறுகிறேன். அச் சமயத்தில் அபாய அறிவிப்புச் சங்கு ஊதுகிறது. ஜெர்மனி விமானங்கள் பறக்கின்றன. குண்டுகள் விழுந்து நாலாபுறமும் வெடிக்கின்றன. என் தலையில் ஒன்று விழாதா என்று நான் ஏங்குகிறேன்.

மிகச் சமீபத்தில் ஒன்று வெடிக்கிறது. அந்த வெடி விபத்தினால் தகர்ந்த அச் செங்கற் குவியலின்மீதே நானும் விழுகிறேன். என்மீது பக்கத்துச் சுவர் இடிந்து விழுகிறது.

நான் சடாரென்று கண் விழித்தேன். உடலெல்லாம் வியர்வை பொழிந்தது. மேலே வைத்திருந்த பெட்டி ஒன்று என்மேல் விழுந்திருந்தது. அதன்பிறகு நான் தூங்கவே இல்லை.

திருநந்திபுரம் ஸ்டேஷனில் இறங்கிப் பிரயாணிகள் அறையில் சாமான்களை வைத்து விட்டுக் குங்குமத்துறை சென்றேன். இந்து என்னைப் பார்த்ததும், கன்றுக் குட்டிக்காக ஓடினளே, அந்த மாதிரி துள்ளி ஓடி வருவாள் என்று எண்ணினேன். இந்து என்ன புடவை கட்டிக் கொண்டிருப்பாள்? எப்படிப் பேசுவாள் என்றெல்லாம் பகற் கனவுகள் கண்டு கொண்டே குங்குமத் துறையை அடைந்தேன்.

அங்கேதான் எனக்கு எவ்வளவு பெரிய ஏமாற்றம் காத்திருந்தது!

அத்தியாயம்-2

## உள்ளம் எரிந்தது

குங்குமத்துறைக்கு மாட்டு வண்டியில் நான் பிரயாணம் செய்து கொண்டிருந்த போது முதன் முதலில் நானும் தங்கபாண்டியனும் சேர்ந்து வந்ததெல்லாம் ஞாபகம் வந்தது. பாதிரித் தோட்டத்தில் இன்பமாகப் பேசிக் கொண்டிருந்ததும், மந்திரமூர்த்தியின் உபசரிப்புக்களும், அன்னை சந்திரமணியிடம் பேசியதும், காசிலிங்கத்தின் வரலாறுகளும் ஒன்றன் பின் ஒன்றாக நினைவுக்கு வந்தன. அந்த மாட்டு வண்டிப் பிரயாணத்தின் போது நான் முன்பு நடந்த என் வாழ்க்கையை மறுபடியும் மானஸீகமாக வாழ்ந்தேன் என்று சொல்ல வேண்டும்.

இந்து எப்படி வரவேற்பாள் என்று கற்பனை செய்து கொண்டே போனேன். ஒரு வேளை அவர்கள் குங்குமத்துறையில் இருக்க மாட்டார்களோ என்ற எண்ணம் தோன்றிய போதெல்லாம் அதை ஒதுக்கித் தள்ளி விட்டு இன்பமான கற்பனையிலேயே மனத்தை ஓட

## கிராமத் தொண்டர்

கிராமங்களின் வளர்ச்சிதான் சுதந்திரம் பெற்ற பாரதத்தின் வளர்ச்சியாகும். கிராமங்கள் வளம் பெறக் கிராமப் பஞ்சாயத்துக்கள் ஊக்கத்துடன் தொண்டாற்ற வேண்டும். அதற்கு அவற்றின் தலைவர்கள் இடைவிடாமல் உழைக்க வேண்டும். இதோ படத்தில் இருப்பவர் சிறமேல்குடி பஞ்சாயத்து போர்டு தலைவர் திரு எம். பி. இராமச்சந்திரன். கிராம வளர்ச்சியில் ஆர்வம் கொண்டு அபாரமாகச் சேவை செய்துவருபவர். தமிழ்நாடு கிராம முன்னேற்ற இக்கிய சங்க தஞ்சை மாவட்டத் துணைச் செயலாளர். சமீபத்தில் தஞ்சை மாவட்டம் அருமலைக் கோட்டையில் நடைபெற்ற ஒன்பதாவது ஜுனியர் மகாநாட்டில் மந்திரி பக்தவத்சலம் அவர்களால் சிறந்த கிராமத் தொண்டர் என்று பாராட்டுப் பத்திரம் பெற்றவர். திரு இராமச்சந்திரன் அவர்களின் முயற்சியில் சிறமேல்குடி பஞ்சாயத்து எல்லா கிராமப் பஞ்சாயத்துக்கும் வழிகாட்டியாக விளங்கும் என்று எதிர்பார்க்கிறோம்.



விட்டேன். நான் செய்தது ரொம்பத் தவறு. அதனாலேயே என் ஏமாற்றம் பல மடங்கு அதிகமாகத் தெரிந்தது.

மந்திரமூர்த்திப் பண்ணையாரின் வீட்டைப் பார்த்த உடனேயே எனக்கு அதில் இந்துமதி இருக்க முடியாது என்று தெரிந்து விட்டது. இருந்தாலும் உள்ளே சென்று கேட்டேன்.

அந்த வீட்டிலிருந்த ஒரு பெரியவர் தாங்கள் அந்த வீட்டுக்கு வந்து வெகு நாட்களாகி விட்டதாகவும், அதற்கு முன்னால் அந்த வீட்டிலிருந்த பெரியவர் இறந்து போய் விட்டார் என்றும் கூறிய போது எனக்கு வானமே இடிந்து என் தலையில் விழுந்துவிட்டதுபோலிருந்தது.

'ஐயோ! இந்துவுக்கு என்ன நேர்ந்திருக்கும்?' என் தலை சுற்றியது. 'இவ்வளவு கஷ்டங்களுக்குப் பிறகும் என் துன்பம் தீரவில்லையே. ஐயோ, இந்து! நீ எப்படியெல்லாம் கஷ்டப்படுகிறாயோ? அனாதையாக எங்கே யெல்லாம் சுற்றுகிறாயோ? உன்னை விட்டு விட்டு நான் படிப்பு பெரிதென்று போனேனே! என் குற்றத்துக்கு மன்னிப்பு உண்டா? நீ என்னைப் பற்றி என்ன நினைத்திருப்பாய்? நயமாகப் பேசி ஏமாற்றினேன் என்று எண்ணி யிருப்பாய். உன்னை எங்கே தேடுவேன்? எப்படி என்னுடைய இதயத்தை உனக்குத் திறந்து காண்பிக்க முடியும்?''

இப்படி யெல்லாம் சிறிது நேரம் மனம் குழம்பிக் கொந்தளிக்க மரம் மாதிரி நின்று கொண்டிருந்தேன். பிறகு, "இந்தவீட்டிலிருந்த பெண் என்ன ஆனாள் தெரியுமா?'' என்று கேட்டேன். அது தெரியாதென்று கூறி விட்டார் அந்தப் பெரியவர்.

பிறகு தங்கபாண்டியனின் அரண்மனையை அடைந்தேன். அங்கே இருந்த பழைய காரியஸ்தரைச் சந்தித்தேன். அவரிடம் இந்துமதியின் குடும்பத்தைப் பற்றி விசாரித்தேன். அவருக்குப் பண்ணையாரைப் பற்றி ஏதும் விவரமாகத் தெரிந்திருக்கவில்லை.

பண்ணையார் இறந்து போன பிறகு அந்த வீட்டுப் பெண்ணை யாரோ பெரிய மனிதர்கள் அழைத்துக் கொண்டு போய் விட்டார்களென்று மாத்திரம் தெரியும் என்று சொன்னார். அவர் தங்கபாண்டியனின் விலாசத்தைக் கொடுத்தார். அவன் பம்பாயில் இருக்கிறான் என்று தெரிந்ததும் எனக்கு, இது முதலிலேயே தெரிந்திருக்கக் கூடாதா என்று தோன்றியது. அங்கேயே என் உணர்ச்சிகளையும், ஏமாற்றங்களையும் விவரித்துத் தங்க பாண்டியனுக்கு ஒரு நீண்ட கடிதம் எழுதித் தபாலில் சேர்த்து விட்டுச் சென்னைக்குப் புறப்பட்டேன்.

விவரிக்க முடியாத சோர்வு என்னைச் சூழ்ந்து கொண்டது. திடீரென்று கை கால்களில் உணர்ச்சியே இல்லாமல், சக்தியே இல்லாமல் போய் விட்டது போலிருந்தது. ரயிலில் கூட ஏற முடியவில்லை. வெகு நாட்கள் உடம்பு சரியில்லாமலிருந்து, குணமாகும்போது ஒரு சோர்வும் தளர்வும் உண்டாகுமே அந்த மாதிரி சோர்வு உடலெங்கும் பரவியது. உடலில் சோர்வு ஏற்பட்டால் நல்ல ஆகாரமும், மருந்துகளும் சாப்பிட்டுத் தேற்றிக் கொள்ளலாம். மனத்தில் ஏற்பட்ட சோர்வுக்கும், பலஹீனத்துக்கும் என்ன மருந்து இருக்கிறது? அதற்கு வேண்டிய மருந்து இந்துமதி தான். ஆ! அவளை மறுபடியும் எப்போதாவது காணப் போகிறேனா?

தலையை எங்கேயாவது முட்டிக் கொண்டால் தேவலை போலத் தோன்றி

யது. ரயிலில் இன்னும் சிலர் பிரயாணம் செய்து கொண்டிருந்தபடியால் அந்த எண்ணத்தைக் கைவிட்டுத் தூங்க முயன்றேன். அதுவும் வரவில்லை.

கா லேயில் கண்களில் ஒரே எரிச்சலாக இருந்தது. நான் என்னுடையகல் ஊரியை அடைந்த போது எல்லோரும் திகைத்துப் போய் விட்டார்கள். என்னுடைய கல்லூரியின் தலைமைப் பேராசிரியர் ஹாஸ்டலில் தங்கி ஓய்வு எடுத்துக் கொள்ளும்படி கூறினார். ஒரு மாதம் கல்லூரியில் இருந்து பொழுது போக்கினேன். என்னுடைய யுத்த கால அனுபவங்களைப் பற்றி எல்லோருக்கும் கூறினேன். நான் களைத்திருப்பதற்குப்பிரயாண அலைச்சல் தான் காரணம் என்று



முதலில் எல்லோரும் கருதினர்கள். நான் முன்போல உற்சாகமாக இல்லாமல் இருப்பதற்குக் காரணம் களைப்பல்ல என்று பிறகுதான் தெரிந்து கொண்டார்கள். நண்பர்களுடைய நானாவித மான கேள்விகளுக்குப் பதில் சொல்லி மழுப்புவதில் நான் இன்னும் களைத்துப் போய் விட்டேன்.

தங்கபாண்டியனிடமிருந்து சில நாட்களில் ஒரு கடிதம் வந்தது. சுருக்கமாகவே எழுதி யிருந்தான்.

"அருமை நண்பன் ரங்கதுரைக்கு,

நீ திரும்பி வரும் விஷயம் எனக்குத் தெரியாமல் போய் விட்டது. தெரிந்திருந்தால் துறைமுகத்திலேயே வந்து சந்தித்திருப்பேன்.

உன்னுடைய நிலையைக் கண்டு எனக்கு ரொம்ப மனத்துக்குக் கஷ்டமாக இருக்கிறது. நான் ஒன்றும் செய்வதற்கில்லையே என்பதை நினைக்கும்போது இன்னும் அதிக வேதனையாக இருக்கிறது.

உண்மையில் பண்ணையார் மந்திர மூர்த்தி இறந்து போன விஷயம் கூட உன் கடிதத்திலிருந்து தான் எனக்குத் தெரிந்தது. அவர்கள் சௌக்கியமாக இருப்பார்களென்றே இது வரையில் நினைத்து வந்தேன்.

நான் இதைக் கவனிக்காமல் இருந்தது பெரியதவறு. என்னை நீ மன்னித்து விடுவாயென்று நம்புகிறேன். என்னுடைய கவலைகளில் நான் மூழ்கியிருந்து விட்டேன் என்பதை நினைக்கும் போதே அவமானமாக இருக்கிறது. மறுபடியும் என்னை மன்னித்து விடு என்று கேட்டுக் கொள்கிறேன்.

உன்னைப் பார்க்க ஆவலாக இருக்கிறது. உனக்குச் சௌகரியப் படும் பொழுது பம்பாய்க்கு வந்து என்னோடு சில நாட்கள் தங்கியிருக்க வேண்டும்.

இப்படிக்கு,
தங்கபாண்டியன்

இதன் பிறகு எனக்கு இருந்த கொஞ்ச நஞ்ச நம்பிக்கையும் போய் விட்டது.

இந்துவின் நிலையைப் பற்றி எத்தனையோவிதமான கற்பனைகள் என் மனத்தில் தோன்றின. நிச்சயமாய் இந்து யாரையும் மணந்து கொண்டிருக்க மாட்டாள். அப்படியானல் அவளை அந்தப் படத்தில் பார்த்தேனே? அதற்கு என்ன பொருள்? அய்யாக் குட்டியின் மூலம் சினிமா நடிகைகளுடன் பழக்கம் ஏற்பட்டிருக்கலா மென்றாலும், இப்போது அவளை எங்கே போய்த் தேடுவது?

சென்னையில் பார்த்ததாகப் பேராசிரியர் தாம்ஸன் கூறினாரல்லவா? சென்னை நகரை நான் அந்த ஒரு மாதத்தில் முப்பது தடவைகளாவது சுற்றி வந்திருப்பேன். இந்து எங்கேயாவது கண்களில் தென்பட மாட்டாளா என்று ஏங்கிப் போனேன்.

இத்தனைக்கும் நடுவில் ஒரு ஆறுதல் இருந்தது. இந்துவுக்குப் பணக் கஷ்டம்

இருக்க முடியாது. அந்தப் படத்தைப் பார்த்து ஒரு வருஷத்துக்கு மேல் ஆகியிருந்த போதிலும் எனக்கு இந்த உறுதி ஏற்பட்டிருந்தது. அய்யாக்குட்டியின் துணை அவனுக்கு இருக்குமானால் நிச்சயமாகப் பணக் கஷ்டம் இருக்க முடியாதென்று தோன்றியது. ஆனால் அது என்ன நிச்சயம்? அது என்னுடைய ஊகம்தானே? அய்யாக்குட்டி அவனோடு இருக்கிறானென்பது என்ன நிச்சயம்? அவருடைய குணாதிசயங்களை எண்ணிப் பார்த்தபோது இந்துவுக்கு அவர் உதவி புரிந்திருக்க மாட்டாரென்றும் தோன்றியது. இப்படியெல்லாம் எத்தனையோ எண்ணங்கள் என்னை அலைத்தன.

கல்கத்தாவுக்கு அருகில் உள்ள சாந்திபூரில் எனக்கு வேலை கொடுத்திருந்தார்கள். அங்கு போய்ச் சேர்ந்தது முதல் வேலையில் ஈடுபட்டேன். எப்போதும் செய்கிற காரியத்தைக் கவனமாகச் செய்யும் வழக்கம் எனக்கு உண்டாதலால் சீக்கிரத்திலேயே நல்ல பெயரும் பெற்றேன். ஆனால் உள்ளத்தின் அடிவாரத்தில் மட்டும் அக்னிக் குழம்பு குமுறிக் கொண்டிருந்தது.

வேலையைச் செய்து முடித்து விட்டு இரவில் படுக்கையில் விழும்போதுதான் எனக்கு என் தனிமையும், உள்ளத்தில் எரியும் நெருப்பின் உஷ்ணமும் தெரிய வரும். இந்துவைப் பற்றிய கவலைகளிலும், அவன் அருகிலிருந்தால் எவ்வளவு இன்பமாக இருக்கும் என்ற மனோராஜ்யங்களிலும் ஈடுபட்டுக் கொண்டே தூங்கிப் போய் விடுவேன்.

சாந்திபூரிலிருந்து கல்கத்தா அருகில்தான் இருந்தது. குமுறும் என் நெஞ்சத்துக்கு ஆறுதல் சாந்திபூரில் கூடக் கிடைக்கவில்லை. ஆகவே எனக்கு விடுமுறை நாட்களில் நான் கல்கத்தா சென்று விடுவது வழக்கம். கல்கத்தாவில் அரவிந்த் தன் மனைவியோடு தனி பங்களாவில் வசித்து வந்தான். இந்தியாவுக்கு வந்ததும் அவனுக்கு மணமாகி விட்டிருந்தது. ஒரு சிறு குழந்தைக்குத் தகப்பனாகவும் ஆகி விட்டிருந்தான்.

அவன் விட்டில்தான் நான் முதன் முதலில் ஒரு சிறிய குடும்பத்தின் அழகைக் கண்டேன். அவன் மனைவி உமா படித்தவள். இருவரும் குழந்தையை மாற்றி மாற்றிக் கொஞ்சிக் கொண்டு காலம் கழித்தார்கள். அதைப் பார்க்கும் போதெல்லாம் எனக்கு ஏதோ ஒரு வேதனை உண்டாகும். இந்துமதியின் வாழ்க்கையும் இப்படி ஆனந்தமாக இருக்க வேண்டுமல்லவா? அப்படி இல்லாமல் நாங்கள் இப்படிப் பிரிந்து இருக்குமிடம் கூடத் தெரியாமல் தவிக்கிறோமே. இந்துவும் தனிமையில்தானே ஏங்கிக் கொண்டிருப்பான். நான் இல்லாமல் அவனுடைய வாழ்க்கை எப்படி நிறைய முடியும்?

இப்படியெல்லாம் நினைத்தும் அவனைக் கண்டு பிடிக்க வழியில்லாமலிருப்பது எனக்குத் தாங்க முடியாத வேதனையாக இருந்தது. எரியும் வீட்டிலிருப்பவனின் கை கால்கள் கட்டப்பட்டிருந்தால் அவன் என்ன பாடு படுவான்? அந்த மாதிரி இருந்தது என் மனநிலை.

ஒரு நாள் அரவிந்தின் வீட்டில் நாங்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்த போது உமா என்னைப் பார்த்து, "நீங்கள் ஏன் இப்படி எப்போதும் சோர்ந்திருக்கிறீர்கள் மிஸ்டர் ராய்?" என்று கேட்டாள்.

அதற்கு அரவிந்த், "அவனுக்கும் வயதாகி வருகிறது. பார்த்துக் கல்யாணம் செய்து வைக்கப் பெரியவர்கள் யாரும் இல்லை. அதனால்தான் இப்படி இருக்கிறான்" என்று கூறினான்.

நான் ஒன்றும் பதில் சொல்லவில்லை.

"அப்படியானால் நாமே பெண்ணைப் பார்த்து அவருக்குக் கல்யாணம் செய்து வைத்து விடுவோமே! நான் பெண் பார்க்கட்டுமா மிஸ்டர் ராய்? உங்களுடைய பதவிக்கும், அந்தஸ்துக்கும் எத்தனையோ பேர் பெண் கொடுக்க முன் வருவார்கள்!" என்றாள் உமா.

அரவிந்த் சிரித்தான். "ஏன் உமா! படித்த பெண்ணாயிருந்தும் கர்நாடகமாக இருக்கிறாயே. அவன் இங்கிலாந்தில் மூன்று வருஷங்களுக்குமேல் இருந்தவன். அவன் காதல் கல்யாணம்தான் செய்து கொள்வான்" என்றான்.

"ஓ! அப்படியா? இங்கிலாந்துதான் காதலுக்கு இருப்பிடமோ? இங்கு கூட இருப்பதாக எனக்குத் தோன்றுகிறதே. காளிதாஸனும், பவபூதியும் இங்கிலாந்துக்குப் போய்விட்டு வந்துதான் காதலைப் பற்றி எழுதினார்கள் போலிருக்கிறது" என்றேன்.

உமா சிரித்து விட்டு, "இது இருக்கட்டும். உங்களைப் பார்த்தால் அசல் வங்காளி மாதிரியே இருக்கிறது. பேசுவதில் கூடச் சிறிதும் வித்தியாசம் தெரியவில்லை. வங்காளிப் பெண்களில் எத்தனையோ பேரை எனக்குத் தெரியும், நீங்கள் சம்மதம் கொடுத்தால்..." என்று கூறினாள்.

"வேண்டாம்! வேண்டாம்! அதைப் பற்றிக் கவலைப் படாதீர்கள்" என்றேன் பயந்து கொண்டே. அந்த எண்ணமே என்னைத் தகித்தது. (தொடரும்)

போட்டிக் கதை

# திருப்பம்




அன்று தங்கம் கூடையை எடுத்துக் கொண்டு 'மார்க்கெட்'டை அடைந்தபோது ஒரு சினிமாக் கம்பெனி 'மார்க்கெட்' காட்சியைப் படம் பிடிக்க ஏற்பாடு செய்து கொண்டிருந்தது. தங்கத்துக்கு வெகு நாட்களாகவே படப்பிடிப்பை ஒரு நாளாவது பார்க்க வேண்டுமென்று ஆசை. அதைத் தன் கணவனிடங் கூடத் தெரிவித்திருக்கிறாள். ஆகவே அவள் கூட்டத்தில் நெருக்கியடித்துக் கொண்டு படப் பிடிப்பை ஆவலோடு பார்க்க முயன்றாள்.

கதாநாயகன் காய்கறி விற்கிறான். கதாநாயகி ஒரு கூடையை இடுப்பில் வைத்தபடி ஒயிலாக நடந்து காய்கறி வாங்க வருகிறாள். பிறகு என்ன? இருவருக்கும் காதல் முளைக்க வேண்டியதுதானே! — இந்தக் காட்சியை 'ஷாட்', 'கட்' முதலிய தங்கத்துக்குப் புரியாத கூக்குரல்களுடன் திருப்பித் திருப்பி எடுக்கும்படி அந்தச் சிடுமூஞ்சி டைரக்டர் கடுமையாக உத்தரவிட்டுக் கொண்டிருந்தார்.

தங்கத்துக்குக் கதாநாயகனைக் கண்டவுடன் சிரிப்புப் பொத்துக் கொண்டு வந்தது. ஏனெனில் அவன் வேலைக்காரன் வேஷத்துக்குக் கூடச் சிறிதும் பொருத்தமில்லாதபடி அவ்வளவு அவலட்சணமாக இருந்தான்.

'கதாநாயகிக்கு இருக்கும் அழகுக்கு நம் அத்தானைப் போல் அழகுள்ள ஒரு ஆளைக் கதாநாயகனைப் போட்டிருந்தால் எவ்வளவு பொருத்தமாக இருந்திருக்கும்!'— இந்த எண்ணம் தோன்றியதும் தங்கத்தின் முகத்தில் இலேசாகப் புன்னகை அரும்பிற்று; அதில் பெருமிதமும் கலந்து குழைந்தது.

படப்பிடிப்பு முடிவதற்குக் கொஞ்ச நேரத்துக்கு முன்பாகவே தங்கம் காய்கறிகளை வாங்க ஆரம்பித்தாள். அங்கேயே நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தால் காய்கறிகளைக் கொடுக்க வேண்டிய வீடுகளுக்குக் கொடுத்து விட்டுத் தன் கணவனுக்கும் சரியான நேரத்தில் மத்தியானச் சாப்பாடு எடுத்துக் கொண்டு போவது எப்படி? மேலும் எவ்வளவு நேரந்தான் அந்தக் கூட்டத்தில் இடிபட்டுக்கொண்டு நிற்பது? ஆகவே, அவள் காய்கறிக் கூடையைத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டு பர பர வென்று தன் வீட்டை நோக்கி நடந்தாள்.

வழியெல்லாம் அவளுக்கு அந்த அவலட்சணமான கதாநாயகனின் உருவமும், அழகே உருவான தன் கணவனின் முகமும் மாறி மாறித் தோன்றிக் கொண்டேயிருந்தன. இடையிடையே, தன்னை 'மேக்கப்' மூலம் அழகு ராணியாக்கிக் கொண்டிருந்த கதாநாயகி குமாரி குஞ்சுமணியின் மோகன உருவமும் அவளுக்குத் தோன்றாமல் இருக்கவில்லை.

இவ்வாறு அழகு ஆராய்ச்சியில் ஈடுபட்டு, தன்னை மறந்து போய்க் கொண்டிருந்த தங்கம் ஒரு சந்தின் திருப்பத்தில் திரும்பினாள். அப்போதுதான் சற்றும் எதிர்பாராத விதமாக அவளுடைய வாழ்வுக்கே ஒரு திருப்பமாக அமைந்த அந்தச் சம்பவம் நடந்தது.

தங்கம் அந்தத் திருப்பத்தில் திரும்புவதற்கும் அவளுடைய கூடையில் என்னவோ ஒரு பொருள் 'பொத்' தென்று விழுவதற்கும் சரியாக இருந்தது. அதைத்தொடர்ந்து அவளைத் தாண்டி ஒருவன் ஓடியதையும், அவனைத் தொடர்ந்து "அதோ ஓடுகிறான்! விடாதே, பிடி!" என்று கூக்குரலிட்டபடி ஒரு போலீஸ்காரனும், இன்னும் சிலரும் ஓடியதையும் கண்டு நினைவு வரப் பெற்றுத் திடுக்கிட்டு நின்றாள் தங்கம்.

முன்னால் ஓடியவர்களின் ஆரவாரம் அடங்கியதும், தன்னை ஒரு மாதிரியாகச் சமாளித்துக் கொண்டு வேறு ஒரு சந்தில் நுழைந்து பயத்தால் படபடக்கும் உள்ளத்துடன் நடுங்கும் கால்களை எட்டிப்போட்டபடி வீட்டை நோக்கி வேகமாக நடந்தாள் தங்கம். வீடு போய்ச் சேரும்வரை 'கூடைக்குள் விழுந்தது என்ன?' என்ற கேள்வி பயத்தால் நடுங்கிக் கொண்டிருந்த அவளுடைய உள்ளத்தை மேலும் நடு நடுங்க வைத்து விட்டது.

வீட்டை நன்றாகத் தாழ்ப்பாள் போட்ட பிறகு பயத்தால் வியர்த்துக் கொட்டிய தன்

முகத்தை முந்தானையால் துடைத்தபடியே அடக்க முடியாத ஆவலுடன் கூடையை உற்றுப் பார்த்தாள் தங்கம்.

வெளிச்சத்திலிருந்து திடீரென்று வீட்டுக்குள் வந்ததால் முதலில் ஒன்றுமே அவளுக்குச் சரியாகத் தெரியவில்லை. ஆகவே கண்களைத் துடைத்தபடி மறுபடியும் பார்த்தாள். 'ஆ!' தன்னுடைய கண்களையே அவளால் நம்ப முடியவில்லை.

அது ஒரு கருப்பு 'மணி பர்ஸ்'!

தங்கத்தைத் தாண்டி ஓடியவன் பின்னால் ஆட்கள் நெருங்கி விட்ட படியால், தான் பிடிபட்டு விடுவோம் என்ற பயத்தில் அதை அவளுடைய கூடையில் எறிந்து விட்டு ஓடியிருக்கிறான்.

சொல்லி முடியாத திகிலுடனும், மகிழ்ச்சியுடனும் அவள் அந்தப் பர்ஸை எடுத்தாள். துடி துடிக்கும் உள்ளத்துடன் அதைத் தொட்ட போது அவளுடைய உடம்பு முழுவதும் திடீரென்று ரத்தம் பரவியது. "கடவுளே, இதில் ஒரு முப்பது ரூபாய் இருக்கக் கூடாதா?" என்று மனத்துக்குள் எண்ணியபடியே அந்தப் 'பர்ஸை'த் தன் மார்பில் ஆவலுடன் அணைத்துக் கொண்டாள்.

அப்போது வெளியே யாரோ கதவைத் தட்டும் சத்தம் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினாள். உடனே பர்ஸை மடியில் மறைத்தபடி பயந்த உள்ளத்துடன் சாவித் துவாரத்தின் வெளியே பார்த்தாள்.

வெளியே—

நாலைந்து பேர் புடைசூழ ஒரு போலீஸ்காரன் நின்று கொண்டிருந்தான்!

தங்கத்துக்குச் சிறு வயது முதற்கொண்டே,—'அழகு' என்ற வார்த்தைக்குச் சரியான அர்த்தம் தெரியாத பருவம் முதற்கொண்டே—அழகான பொருள்களிடத்தில் ஒரு பற்று. வயது ஏற ஏற அது ஒரு வெறியாகவே மாற ஆரம்பித்தது. தான் அவ்வளவு அழகாக இல்லா விட்டாலுங்கூட அழகானவர்களைக் கண்டால் அவர்களிடம் ஒரு பக்தி-பெரு மதிப்பு!

அவள் இளமையில் தன்னுடைய தெருவில் இருந்த அழகிய குழந்தைகளிடமெல்லாம் உயிரையே வைத்திருந்தாள் என்று சொல்ல வேண்டும். அவளைப் போலப் பெற்றதாயுங்கூட அவ்வளவு அக்கறையாக, பொங்கும் உள்ளத்தோடு அந்தக் குழந்தைகளைக் கவனித்திருக்க முடியாது. மூக்கும் முழியுமாக, அழகின் பிம்பமாக இருந்த எதிர் வீட்டுக் குழந்தை இறந்து போனதை எண்ணி அவள் வெகுநாள் அழுதிருக்கிறாள். அந்த அழகிய குழந்தையை இப்போது நினைத்துக் கொண்டாலும் கூட அவளுக்கு இலேசாகக் கண் கலங்கும். ஆம், அந்தக் குழந்தை அவ்வளவு அழகு! அதன் அழகு அவ்வளவு தூரம் அவளைக் கவர்ந்திருந்தது.

இப்படிப்பட்ட அழகு வேட்கை கொண்ட தங்கத்துக்குத் தன் அத்தை மகனே—அழகில் ராஜா போன்ற சுந்தரமே கணவனாக வாய்த்தான் என்றால் அவளுடைய மகிழ்ச்சிக்குச் சொல்லவா வேண்டும்? ஆகவே தங்கம் தன் அழகுக் கணவன் மீது உயிரையே வைத்து அவனைத் தன் உள்ளத்துத் தெய்வம் போல் பூஜித்து வந்ததில் சிறிதும் வியப்பில்லையல்லவா?

தங்கத்துக்குத் தன் கணவனின் அழகிய முகத்தை எப்போது நினைத்துக் கொண்டாலும் உடல் சிலிர்க்கும், உள்ளம் பர



வசத்தால் பொங்கி வழியும். அவளுக்கு எப்போதாவது பொழுது போகாவிட்டால் வீட்டைத் தாழ்ப்பாள் இட்டுவிட்டுத் தன் கணவனின் புகைப் படத்தை எடுத்து வைத்துக் கொண்டு பொழுது போவது தெரியாமல் வெறி பிடித்தவள் போல மணிக் கணக்காகப் பார்த்துக் கொண்டிருப்பாள். எப்போதாவது பக்கத்து வீட்டுப் பெண்களோ குழந்தைகளோ தன்னுடைய கணவனின் அழகைப் பற்றிக் குறிப்பிட்டு விட்டால் தங்கம் மகிழ்ச்சியால் திக்குமுக்காடிப் போவாள். ஆகவே அவள் தன்னுடைய கணவனை மேலும் மேலும் அழகுபடுத்திப் பார்க்கவே விரும்பினாள். ஆனால் தங்கம் ஒன்றை மறந்து விட்டாள்.

தனக்கு அழகில் சிறந்த கணவன் கிடைத்திருப்பதை எண்ணி எண்ணித் தங்கம் மகிழ்ந்தாள்; பெருமிதம் கொண்டாள். ஆனால் ஒளி வீசும் உயர்ந்த வைரத்தைப் பதித்து வைக்கத் தகுந்த தனித் தங்கமாகத் தன்னை மாற்றிக் கொள்ளத் தங்கம் மறந்து விட்டாள்.

ஆம், அவனுக்குத் தகுந்த மனைவியாகத் தன்னை அழகுபடுத்திக் கொள்ள வேண்டும் என்பதையும் மறந்து விட்டுத் தன்னுடைய கணவனின் அழகாகிய மகுடிக்கு ஆடும் பாம்பாக ஆடினாள் தங்கம். அவனும் மனைவியின் இந்தப் பலவீனத்தை நன்கு பயன்படுத்திக் கொண்டான்.

தங்கத்தின் கணவன் சுந்தரம் தன் பெயருக்கு அதிகமாகவே அழகாக இருந்தான். ஆனால் அதைவிட அதிகமான செலவாளியாக இருந்தான்.

'அளவான உயரம், அழகான உடல், அமைவான தோற்றம், பார்த்தவர் கண்ணைப் பரவசமாக்கும் பளிச்சென்ற முகம், கண்டவரைக் கவரும் காந்தக் கண்கள், எவ்வளவு படிய வாரினாலும் படிய மறுத்துப் பிடிவாதமாக நெற்றியில் புரண்டு அவனுடைய அழகைப் பறைசாற்றும் கன்னங்கரிய சுருண்ட தலை முடி'— இவைதான் சுந்தரத்தின் சித்திரம். சுருக்கமாகச் சொன்னால் சுந்தரத்துக்கு ஒரு உயர்தரமான சினிமாக் கதாநாயகனுக்கு இருக்க வேண்டிய அழகுக்கு மேல் இருந்தது. இருந்த போதிலும் அவன் சினிமாவில் நடிக்கப் போகவில்லை. 'டாக்ஸி' டிரைவராகத்தான் அவன் இருந்து வந்தான்.

அவனுக்குக் குழந்தை குட்டிகளின் அன்புப் பிடுங்கல் இல்லாத ஒரு சிறு குடும்பத்தைக் குதூகலமாக வைத்துக் கொள்ளப் போதுமான சம்பளம்,— ஆனால் அவனை மட்டுங் கூடக் குதூகலமாக வைத்துக் கொள்வதற்குப் போதாத சம்பளம்,—அளவுக்கு மீறிய செலவினம். சுருக்கமாகச் சொன்னால் சுந்தரம் ஏறக்குறையசம்பளத்தில் முக்கால் பாகம் செலவு செய்து விடுவான். ஆகவே தங்கம் தினமும் மார்க்கெட்டுக்குச் சென்று காய்கறி வாங்கி வந்து, இரண்டு மூன்று பெரிய வீடுகளுக்குக் கொடுத்தல் போன்ற சிறு சிறு வேலைகளைச் செய்து, குடும்பத்தின் பற்றாக் குறையைத்









Tushar

தீர்க்க வேண்டிய பொறுப்பு அவன் தலையில் விழுந்தது.

இந்த நிலையிலும் தங்கத்துக்கு ஒரு ஆசை, கணவனுக்கு எப்படியாவது ஒரு கைக்கடிகாரம் வாங்கிக் கொடுக்க வேண்டுமென்று. ஆகவே அவன் குடும்பத்தையும் நடத்திக் கொண்டு கணவனுக்குத் தெரியாமல் ரகசியமாகக் கடிகாரத்துக்கும் பணம் சேர்க்க ஆரம்பித்தான். இந்த இரண்டு வருடங்களாகக் கொஞ்சங் கொஞ்சமாக முயன்று எப்படியோ எழுபது ரூபாய் வரை சேர்த்து விட்டான். அவன் தான் காய்கறி வாங்கிக் கொடுக்கும் ஒரு வீட்டில் கேட்டுத் தெரிந்து கொண்டபடி ஒரு நல்ல கடிகாரத்துக்கு இன்னும் முப்பது ரூபாய் வேண்டும். அந்தப் பணமும் சேர்ந்தவுடன் ஒரு நாள் அதை எடுத்துத் தன் கணவன் கையில் திடீரென்று கொடுத்து ஒரு கடிகாரம் வாங்கிக் கொள்ளும்படி கூறி அவனை ஆச்சரியத்திலும் மகிழ்ச்சியிலும் ஆழ்த்த வேண்டும்—இது தான் தங்கத்தின் திட்டம்.

இந்த நிலையில்தான் தங்கத்துக்கு எதிர்பாராதவிதமாக அந்த 'மணிபர்ஸ்'கிடைத்ததும், அதைத் தொடர்ந்து போலீஸின் தரிசனம் கிடைத்ததும்.

ஆனால் இதென்ன விபரீதம்! தங்கம் அதிர்ஷ்டவசமாகக் கிடைத்த பணத்தை எண்ணிப் பார்த்து மகிழ நினைக்கும் சமயத்தில் மிகப் பெரிய ஆபத்தல்லவா வரப் பார்க்கிறது!

தங்கம் நடுங்கிய குரலில் "யாரது?" என்றான். அவனுக்கு எங்கே இந்த 'மணி பர்ஸ்' போவதோடல்லாமல், வீட்டைச் சோதனையிட்டால் அந்த 70 ரூபாயும் போய் விடுமோ என்ற பயம்.

"நாங்கதான். கதவைத் திறம்மா!"— இது போலீஸின் அதிகாரக் குரல்.

கதவு திறக்கப்பட்டது. பயந்து நடுங்கிக் கொண்டே தங்கம் இலேசாக வெளியில் எட்டிப் பார்த்தான்.

போலீஸ்காரர் கடுமையான குரலில், "குருசாமி வீடு இதுதானே?" என்று கேட்டார்.

குருசாமி அந்தப் பேட்டையில் "வசிக்கும் பேர் போன 'பிக்பாக்கெட்' பேர்வழி என்பது தங்கத்துக்குத் தெரியும்.

"இல்லீங்களே!" என்று தங்கம் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு மெதுவாகப் பதிலளித்தான்.

அதற்குள் வழியில் வந்த ஒரு ரிக்ஷாக்காரன் குருசாமி வீட்டைக் காட்டுவதாக அவர்களை அழைத்துச் சென்றான்.

"அப்பாடா, தலை போனச்சுது!" என்று பெருமூச்சு விட்டபடியே கதவை



"தலை எழுத்து என்று சொல்றீங்களே, அது எல்லாருக்கும் உண்டா ஐயா?"

"தலை இருக்கிறவர்கள் எல்லோருக்கும் நிச்சயம் உண்டு!"

மறுபடியும் தாளிட்டான் தங்கம். யாராவது மறுபடியும் வந்து கதவைத் தட்டுகிறார்களா என்று கொஞ்ச நேரம் நிதானித்தான். பிறகு அவசரம் அவசரமாக மடியிலிருந்த 'பர்ஸை'ப் பிரித்தான். உள்ளே எவ்வளவு இருக்குமோ என்ற பரபரப்பு!

உள்ளே நான்கு பத்து ரூபாய் நோட்டுக்கள்! இரண்டு ஒரு ரூபாய் நோட்டுக்கள்! கொஞ்சம் சில்லறை!

பணத்தை அவசரம் அவசரமாகப் பதட்டத்துடன் நான்கைந்து தடவைகள் எண்ணிப் பார்த்தான். பிறகு அவனுடைய ரகசிய கஜானாவான ஒரு தகர டப்பியில்-வாயைக் கட்டி வயிற்றைக் கட்டி உழைத்துப் பைசாப் பைசாவாக இரண்டு வருடங்களாகச் சிக்கனம் பிடித்துச் சேமித்து வைத்திருந்த அழுக்கு நோட்டுக்களான எழுபது ரூபாயுடன், திடீரென்று ஒரு விநாடியில் கிடைத்த புத்தம் புது நோட்டுக்களான அந்த நாற்பத்து இரண்டு ரூபாயையும் போட்டு மூடி வைத்தான்.

தகர டப்பிக்குள் பழைய அழுக்கு நோட்டுக்களும், திடீரென்று வந்த புது நோட்டுக்களும் விபரீதமாக என்னென்னவோ ரகசியம் பேசிக் கொண்டன.

'நாளைக்கே ஒரு கடிகாரம் வாங்கி அதை அவர் கையில் கட்டி, அவரை ஒரு போட்டோ எடுத்துக் கொள்ளச் சொல்ல வேண்டும்' என்று எண்ணியபடியே மகிழ்ச்சியால் நடுங்கும் கைகளைப் பர்ஸுக்குள் விட்டு ஒவ்வொரு அறையாக மறுபடி



பையன்கள் :- வாத்தியாரய்யா! காலேஜுக்குப் போக பஸ் ஒன்று கூட வந்தபாடில்லை. மணியோ ஆகிறது. ஒரு யோசனை, வகுப்பை இங்கேயே நடத்தி விடுங்களேன்!

யும் சோதனை போட்டான் தங்கம். இன்னும் தப்பித் தவறி ஏதாவது இருக்குமோ என்ற ஆசை அவளுக்கு.

அவளுடைய முயற்சி வீண் போகவில்லை! ஒரு சிறு 'கள்ள' அறையில் ஒரு சிறிய படம்—ஒரு 'போட்டோ' இருந்தது.

'ஓ! இது பர்ஸின் உரிமையாளருடையதைப் போலிருக்கிறது!' என்று எண்ணியபடியே அதைப் பார்த்தான்.

ஏன், ஏன், அவளுடைய முகம் அப்படி மாறுகிறது? அந்தப் படத்திலிருப்பது பேயா? பிசாசா? அல்லது......

அவசரம் அவசரமாகத் தகர டப்பியிலிருந்து அந்த நாற்பத்திரண்டு ரூபாயை எடுத்து மறுபடியும் அந்தக் கருப்பு மணி பர்ஸில் வைத்து மூடினான்.

பிறகு மறுபடியும் அந்தப் போட்டோவைப் பார்த்தான். அந்தப் படம் விநாடிக்கு விநாடி பெரிதாக, பூதம் போல் வளர்ந்து தன்னைப் பார்த்துக் கெக்கலி கொட்டி நகைப்பது போல் அவளுக்குத் தோன்றியது. உடனே நெஞ்சை அழுத்திப் பிடித்துக் கொண்டு அப்படியே சுருண்டு நிலத்தில் படுத்து விட்டான். எவ்வளவு நேரம் அப்படியே இருந்தாளோ, அவளுக்கே தெரியாது. பிறகு மறுபடியும் எழுந்தான். அப்போது சுவரில் மாட்டியிருந்த கண்ணாடியில் தன் உருவத்தைத் தற்செயலாகக் கண்டான். தன் நிலையைக் கண்டு அவளே வெட்கிப் போனான்.

எண்ணெய் கண்டு இரண்டு நாட்களுக்கு மேல் ஆகிய வாரப்படாத தலை! அழுக்குப் படிந்து எண்ணெய் வடியும் முகம்! ஒரு பழைய புடவை, அதற்குக் கொஞ்சங் கூடப் பொருத்தமில்லாத ரவிக்கை! கழுத்தில் அந்த மங்களச் சரடு! அவ்வளவுதான்-பொதுவாக இருக்கும் அழகையும் சிதைத்துக் கொண்ட தோற்றம்.

பிறகு கையிலிருந்த படத்தை மிகுந்த சிரமத்துடன் பார்த்தான்.

இயற்கையாக அழகில்லா விட்டாலுங் கூட நன்றாக அழகுபடுத்தி மகிழ்ச்சியை வாரியிறைக்கும் முகம்! அதில் ஒரு மோகனப் புன்னகை! மனத்தை மயக்கும் வண்ணம் நன்றாக அலங்கரிக்கப்பட்ட அலை அலையான அழகிய கூந்தல்! அதைத் தழுவியபடி சிரிக்கும் மலர்க் கூட்டம்! அழகுக்கு அழகு சேரும்படி நெற்றியிலே ஒரு பொட்டு! அருமையான புடவை, அதற்கேற்ற ரவிக்கை! காதிலே வைரத் தோடு-கழுத்திலே வைரமாலை!

—இத்தனை அலங்காரங்களுடன் ஒயிலாக நின்றிருந்தான் சினிமா நடிகை குமாரி குஞ்சுமணி. அவளை லேசாக அணைத்தபடி, சிரித்தபடி நின்று கொண்டிருந்தான் சுந்தரம்—தங்கத்தின் அழகுக் கணவன்; அன்புக் கணவன்!

# செழிப்பிற்கு மூலாதாரம் எது?

நாம் 'செழிப்பு' 'முன்னேற்றம்' என்று பலவிதமாகப் பேசக் கேட்கிறோம். ஆனால் நம் நாட்டில் பெரும்பாலோருக்கு இவ்விரு வார்த்தைகளின் பொருளே தெரியாது. ஏனெனில் இவர்களில் ஐந்தில் நான்கு பேர்களுக்கு எழுதப்படிக்கத் தெரியாது. இவர்களுக்கு கல்வி கற்பித்து, நம் நாட்டு விவகாரங்களை உணர்ந்து அவைகளைத் தீர்ப்பதில் பங்கு எடுக்கச் செய்வது நம் கடமை.

பொது ஜனங்களின் கல்வி பிரசார அபிவிருத்தியுடன், காகிதத்தின் தேவையும் அதிகரிக்கிறது. இத்தேவையை சமாளிக்க, நமது காகித தொழிற்சாலைகள் தயாராயிருக்கின்றன. நம் நாட்டின் 32 காகிதத் தொழிற்சாலைகள், ஆண்டுதோறும் 1,58,000 டன் காகிதம் உற்பத்தி செய்கின்றன. 1956 ம் வருடத்தில், 5 கோடி ரூபாய் செலவில் 2,87,000 டன் காகிதம் உற்பத்திச் செய்ய இத்தொழிற்சாலைகள் திட்டம் செய்துள்ளன. நம் நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு எஃகு இன்றியமையாதது. இதற்காகவே டாடா அயரன் அண்டு ஸ்டீல் கம்பெனியார், தங்களுடைய உற்பத்தியை மென்மேலும் அதிகரிக்க பல திட்டங்களைக் கையாண்டு வருகிறார்கள்.

**இரும்பு உற்பத்தி**

1955 ... 10,50,000 டன்கள்
1959 ... 20,00,000 டன்கள்



தனியார் தொழில் தேச நலனுக்காகப் பாடுபடுகிறது.

**தி டாடா அயரன் & ஸ்டீல் கம்பெனி லிட்.**

TN 575

# பாக் செய்யப்படாத வில்லைகளை வாங்குவதில் ஜாக்கிரதையாய் இருங்கள்!



பாக் செய்யப்படாத வில்லைகள் வயிற்றுக் கோளாறு செய்யும் அமிலப் பொருள்களை உண்டாக்கக்கூடியதால், புதிய 'ஆஸ்ப்ரோ' வில்லைகளை ஆவியினின்றும் நீர்த்திவலைகளினின்றும் பாதுகாக்கும் பொருட்டுத் தனித்தனியாக சீல் செய்யப்பட்டிருக்கிறது. ஆகையால் புதிய 'ஆஸ்ப்ரோ' அபாயமில்லாதது. இது இருதயத்தையோ, வயிற்றையோ பாதிக்காது. துர்ப்பழக்கம் ஏற்படுத்தக் கூடிய மருந்துகள் இதில் கிடையாது.

நவீன முறையில் சிறப்பாகத் தயாரிக்கப்பட்ட புதிய 'ஆஸ்ப்ரோ' துரிதமாக வேலை செய்கிறது. அதனால் தலைவலி, உடம்புவலி, ஜலதோஷம், ஜுரம் முதலியவைகளினின்றும் நிவாரணமளிக்க, சாப்பிட்ட மூன்று வினாடிகளில், அதனுடைய வேலையைத் துரிதமாக ஆரம்பிக்கிறது.

**அபாயமில்லாத துரித நிவாரணம் உங்களுக்குக் கிடைக்கும் —**

**புதிய 'ஆஸ்ப்ரோ' வில்லை**




'ஆஸ்ப்ரோ' ஸீல்டட் துண்டுகளையே வாங்குங்கள்.

★ வயிற்றுக் கோளாறு உண்டாக்கும் அமிலப் பொருள்களிலிருந்து காப்பாற்றும்.

★ எப்பொழுதும், எந்த சமயத்திலும், எந்த இடத்திலும் எளிதாக உபயோகிக்க கையில் எடுத்துச் செல்லக் கூடியது.

★ நயமான, ஆரோக்கியமுள்ள மூன்று வில்லைகளின் விலை இரண்டு அணாதான்.

278

கடைகளில் விற்கப்படும் எல்லா 'ஆஸ்ப்ரோ' வில்லைகளும் புதிய 'ஆஸ்ப்ரோ' வில்லைகளே.

# கிராமம் ஒரு குடும்பம்

சுரேஷ் ராம்

ஒரிஸ்ஸா ராஜ்யத்தில் வினோபா அடிகளுடன் யாத்திரை சென்றபோது, ஒருநாள் நாங்கள் லெல்லிங் என்ற ஊரில் தங்கினோம். அன்றைய மாலைப் பிரார்த்தனைக் கூட்டக் காட்சி அழகிய வண்ண ஓவியம் வரையத் தகுந்த காட்சியாக இருந்தது. கொஞ்ச நாழிகை பலத்த மழை பெய்தது; சற்று நாழிகை வெய்யில் அடித்தது. சூரியனுக்கும் மழைக்கும் நடந்த இந்தக் கண்ணாமூச்சி விளையாட்டினிடையே ஆண்களும், கையில் குழந்தைகளை ஏந்திய பெண்களும் கூடி நின்று வினோபா அடிகளின் பொன்னுரைகளை மிகுந்த கவனத்தோடு கேட்டார்கள்.

"உங்கள் கோராப்பட்டு ஜில்லாவில் ஏற்கனவே 450 கிராமங்களுக்கு மேல் கிராம தானமாகக் கொடுக்கப்பட்டுள்ளன. கிராம மக்களின் பூரணவிருப்பப்படி அக் கிராமங்கள் அந்தந்தக் கிராம மக்களுக்கே சமமாகப் பங்கிட்டு விநியோகிக்கப் பட்டுள்ளன. அம்மக்களிடையே புதியதோர் அன்பு ஊற்றுப் பெருக்கெடுத்திருக்கிறது. அவர்கள் ஒருவருக்கொருவர் உதவிக் கொள்ளுகிறார்கள். இது அவர்களுக்குள் இருந்த அற்பப் பூசல்கள், திருட்டுகள், பொறாமைகள் ஆகியவற்றை அறவே ஒழித்து விடும்.



இத்துடன் நான் இன்னொரு யோசனையும் கூற விரும்புகிறேன். ஒரு வீட்டில் கல்யாணம் என்று வந்தால் அது அந்த ஒரு குடும்பத்தின் பெரும் சுமையாகி விடக் கூடாது. கிராமத்தைச் சேர்ந்த எல்லாக் குடும்பத்தினரும் உதவி புரிய வேண்டும். மேலும் கிராமத்துக்கெல்லாம் சேர்ந்து ஒரு கிராமக் கடைதான் இருக்கவேண்டும். மனிதனுக்குத் தேவையாயுள்ள எல்லாப் பொருள்களும் நியாயமான விலைக்கு அந்தக் கடையில் கிடைக்க வேண்டும். அப்படிச் செய்தால் வெளியார் வந்து கற்பனைக்கு மிஞ்சிய விலை வைத்து விற்கும் கெட்ட வழக்கம்போய் விடும். கிராமக் குழந்தைகளுக்கு என்று ஒரு பள்ளிக்கூடம் இருக்க வேண்டும். மறைந்து போன கிராமத் தொழில்களுக்குப் புத்துயிர் அளிக்க வேண்டும். அத் தொழில்களைக் கற்றுத் தர ஏற்பாடு செய்ய வேண்டும். கிராம மக்கள் ஒருவருடன் ஒருவர் அன்யோன்யமாக வாழ வேண்டும். தங்கள் சொந்த கஷ்ட நஷ்டங்களைப் பிறருடன் கலந்து ஆலோசித்துத் தீர்த்துக் கொள்ள வேண்டும். இவையெல்லாம் கிராம தானத்தைத் தொடர்ந்து ஏற்பட வேண்டிய நல்ல காரியங்கள்."

* * *

சில நாட்களாக ஒரு அமெரிக்க சகோதரி எங்களுடன் வசித்து வந்தாள். அந்த அம்மையார் துருக்கியில் இரண்டு ஆண்டுகள் இருந்து விட்டு, இங்கு வந்திருப்பவர். அவர் நாங்கள் தங்கும் கிராமங்களுக்குள் எல்லாம் சென்று பார்த்து விட்டு வருவாள். அப்படி அவள் போகும் கிராமங்களில் எல்லாம் குழந்தைகள் அம்மையாரைச் சூழ்ந்து கொள்வார்கள். இதைப் பார்த்து விட்டு அவள் ஏற்கனவே கேள்விப் பட்டிருந்த ஒரு விஷயம் உண்மைதான் என்று தீர்மானித்து விட்டாள். அதாவது பாரதத்தின் மிகப் பெரிய பிரச்னை ஜனத் தொகைதான் என்று முடிவு கட்டி விட்டாள். இதன் விளைவாக எங்களில் ஒருவரைப் பார்த்து, "பூதான இயக்கம் வெற்றி யடைந்தால்தான் என்ன பிரமாத பிரயோசனம் ஏற்பட்டு விடப் போகிறது! உங்கள் ஜனத் தொகைப் பிரச்னையை யல்லவா முதலில் நீங்கள் சமாளிக்க வேண்டும்" என்றாள்.

"இது ஒரு பிரச்னையே அல்ல! இதன் பொருட்டுப் பயப்பட வேண்டிய அவசியமுமில்லை" என்று கூறிச் சில புள்ளி விவரங்களையும்

எடுத்துக் கூறினோம். லில்லிங் ராய் என்ற அந்தக் கிராமத்தில் 86 குடும்பங்கள் இருந்தன. கிராமத்தின் மொத்த ஜனத் தொகை 353 பேர். அவர்களில் ஆண்கள் 110 பேர், பெண்கள் 130 பேர், குழந்தைகள் 113 பேர். அப்படியானால் மூன்று குடும்பங்களுக்குச் சேர்ந்து நான்கு குழந்தைகள்தான் கணக்காகின்றன. பிணுகம் என்ற கிராமத்தில் குடும்பங்கள் 65, ஜனத்தொகை 278, ஆண்: பெண்: குழந்தை 80 : 92 : 100 அதாவது இரண்டு குடும்பங்களுக்கு மூன்று குழந்தைகள்தான்! இந்தப் புள்ளி விவரங்களை அந்த அம்மையாரிடம் எடுத்துக் கூறிவிட்டு, "இதைப் பார்த்த பிறகும் பாரதம் அதிக ஜனத்தொகையால் கஷ்டப் படுவதாகச் சொல்வீர்களா!" என்று கேட்டோம். அந்த அம்மையார் பதிலே சொல்லவில்லை, மௌனமாக இருந்தார். அந்த அம்மையார் தன் தேசத்தில் நடக்கும் நம் நாட்டைப் பற்றிய தவறான பிரசாரத்துக்கு மீண்டும் இலக்காகி விடமாட்டார் என்று நம்புவோமாக!

* * *

பிணுகம் என்ற ஊரில் நடைபெற்ற பிரார்த்தனைக் கூட்டத்தில் வினோபா அடிகள் பின்வருமாறு கூறினார்:

"கிராமதானம் அல்லது நிலத்தின் தனி உடைமை ஒழிப்பு நிலப் பிரச்னையைத் தீர்ப்பதுடன் மக்கள் ஒன்றுபட்டு வேலை செய்யும் அற்புதச் சாதனையையும் சாதித்து விடுகிறது. அதுவும் எப்படி! சமுதாய நலன் என்னும் தெய்வ சன்னிதியில் தனி நபர்கள் தங்கள் சொந்த நலன்களை யெல்லாம் அர்ப்பணித்து விடுகிறார்கள்!

மேனாட்டுச் சிந்தனையாளர்களும் சமுதாய வாதிகளும் கூறி வந்த தனி நபர்—சமுதாயப் போராட்டங்கள், முரண்பாடுகள் ஆகிய பிரச்னைகள் இங்கே எழுவதே இல்லை. ஆக, கிராமதானம் வழங்குபவர்கள் உலகுக்கே ஒரு புது சமுதாய சாஸ்திரத்தைப் போதிக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை. சுயநலத்துக்கும் பிறர் நலத்துக்கும் இடையில் பெரும் அகழி யிருக்கிறது என்று சொல்லி வந்தார்கள் அல்லவா! அந்த அகழியே கிராம தானத்தில் தூர்க்கப்பட்டு விடுகிறது. மக்களுக்கு ஓர் புதுச் சக்தியும் உற்சாகமும் ஊட்டுகிறது. அதில் ஈடுபட்டு வேலை செய்பவர்களுக்கு அதைத் தவிர வேறு சுவாரஸ்யமான விஷயம் இருக்க முடியுமா என்று தோன்றுகிறது!"

பின்னர் வினோபா அடிகள் நிலத்தில் உடல் உழைத்து வேலை செய்ய வேண்டியதின் அவசியத்தை வற்புறுத்தினார். ஒவ்வொருவரும் கொஞ்ச நாழிகை விவசாயத்தில் ஈடுபட வேண்டும் என்பது அடிகளின் கருத்து. இதைப் பின்வருமாறு கூறினார்:

"இனி ஜாதி வித்தியாசம் கிடையாது. செருப்புத் தைப்பவன் தன்னைச் சக்கிலியன் என்று கூறிக் கொள்ள மாட்டான். அவன் தன்னை, 'செருப்புத் தைத்தலைத் தொழிலாகக் கொண்ட கிராம சேவகன்' என்று கூறிக் கொள்வான். மேலும் செருப்புத் தைக்கும் விவசாயி, தச்ச வேலை செய்யும் விவசாயி, தறி வேலை செய்யும் விவசாயி என்றுதான் இருப்பார்கள். ஒவ்வொருவரும் நிலத்தில் வேலை செய்யும் விவசாயியாக இருக்க வேண்டும். கோராப்பட்டு ஜில்லாவைச் சேர்ந்தவர்கள் இவ்விஷயத்தை நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன். அப்படித் தெரிந்து கொண்டு வேலை செய்தார்களானால் இந்த ஜில்லாவில் தோன்றும் ஜோதி தேசமெங்கும் பரவி ஒளி வீசும் என்பதில் ஐயமில்லை!"

* * *

வினோபா பார்மூல்கா என்ற கிராமத்துக்குச் சென்றார். அன்று பிற்பகல், நாங்கள் சிலர், பக்கத்தில் கிராம தானமாக வழங்கப்பட்ட ஒரு கிராமத்தைப் பார்வையிடப் போனோம். எங்களிடம் சிலர் தங்கள் குறைகளைக் கூறிக் கொண்டார்கள். கிராமத்து லேவாதேவிக்காரர் விதைக்கென்று கேட்கும் நெல்லுக்கு நூற்றுக்கு நூறு வீதம் வட்டி கேட்பதாகக் கேள்விப்பட்டோம். அதாவது இப்பொழுது ஒரு படி நெல் விதைப்பதற்குக் கொடுத்தால் அறுவடை காலத்தில் இரண்டுபடி நெல்லாகத் திருப்பிக் கொடுக்க வேண்டுமென்று சொல்கிறார் என்று கேள்விப்பட்டோம்.

இது சம்பந்தமாக அன்று மாலை வினோபா அடிகள் பிரார்த்தனைக்குப் பிறகு பின்வருமாறு கூறினார்.

"கிராம தானத்தினால் புதிய சூழ்நிலை ஏற்பட்டுள்ளது. நாம் நிர்மாணிக்க விரும்பும் புதுச் சமுதாயத்தில் பழைய வழக்கங்களுக்கு இடம் தரக்கூடாது. இன்று கடன் கொடுத்தவர்கள் தாங்கள் கொடுத்ததைவிட இரண்டு மடங்கு அதிகமாகத் திரும்பப் பெறலாம். ஆனால் நான் என்ன சொல்கிறேன் என்றால், உங்களிடத்தில் உபயோகமின்றிக் கிடந்த பொருளை ஒருவன் உபயோகிக்கிறேன் என்று முன்வந்தால், அவனுக்கு நீங்கள் நன்றி செலுத்த வேண்டும். நீங்கள் அவனிடமிருந்து ஒன்றும் அதிகப்படியாகக் கேட்கக் கூடாது. ஒருவேளை அந்தப் பொருள் திரும்ப வேண்டியிருந்தால், கொடுத்ததற்கு மேல் இம்மியும் வாங்கிக்கொள்ள கூடாது. கொடுத்த அளவுதான் பெறவேண்டும்.

பார்மூல்கா என்னும் கிராமத்து மக்களுக்கு மேலும் வினோபா அடிகள் பல உபதேசங்களைச் செய்தார்.

"நாம் சிருஷ்டித்து வரும் புதுச் சமுதாயத்தில் வட்டி வியாபாரம், தரகு வியாபாரம், லாப வியாபாரம், குத்தகை வியாபாரம் முதலிய விஷயங்கள் அறவே இருக்கலாகாது. மூலதனம் எந்த ஒரு இடத்திலும் தேங்கலாகாது. அது வீட்டுக்கு வீடு போய் வரும். ஒவ்வொரு வீடும் பணம் புழங்கும் பாங்காகத் துலங்க வேண்டும். எவரும் எந்த வீட்டிலிருக்கும் தங்களுக்கு வேண்டியதைப் பெறலாம். யாரும் எவருடைய உழைப்பையும் பெறலாம். உடம்பிலுள்ள ரத்தத்தைப் போல் மூலதனம் சமுதாயம் பூராவும் எல்லா கானங்களிலும் சுற்றிவர வேண்டும். இந்த நோக்கத்தோடுதான் நான் கிராமதானம் செய்யுங்கள்; ஒரு குடும்பமாக வாழுங்கள் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்!"

# மேலும் மலிவானது!

PROTEX
All-Purpose
TOILET POWDER

# குடும்பம் முழுவதற்கும் ஒரே டால்க்

ரம்மியமணம் கொண்ட ப்ரோடெக்ஸ் உயர்ந்தரக சர்வ பிரயோக வாசனைப் பௌடர்; மிக மிகக் குறைந்த விலையில் மிக மிகப் பெரிய டப்பா! இந்தியாவெங்கும் ஆயிரக்கணக்கான குடும்பங்கள் ப்ரோடெக்ஸ் டால்கம் பௌடரைவிரும்புகின்றன—அதன் வசீகரமான வாசனையினாலும் எல்லாவற்றிற்கும் உபயோகப்படும் பரிமள டால்கம் பௌடர் என்பதனாலும்......

## இன்று ப்ரோடெக்ஸ் உபயோகித்தீர்களா?

குணம் உத்தரவாதம்
கால்கேட் பாமாலிவ்
அளிக்கிறது




# ப்ரோடெக்ஸ்

## சர்வப்பிரயோக வாசனைப்பௌடர்

PTR/6/3




கடைசியில் ஒருவழியாக அன்றையக் கல்லூரி தின நிகழ்ச்சிகள் முடிவடைந்து விட்டன. விழாவைக் கண்டு களிக்க வந்திருந்தவர்களின் கூட்டம் எல்லாம் கலைந்து கல்லூரி அறை ஆட்டம் முடிந்த சினிமாக் கொட்டகை போல் காட்சியளித்துக் கொண்டிருந்தது.

நாடகம் நடந்த மேடைக்குப் பின் பக்கத்தில் 'மேக்கப்'செய்து கொள்ளும் பகுதி. நகை நட்டுக்களைக் களைந்து, உடை மாற்றிக் கொண்ட வத்ஸலா அவற்றைப் பையில் திணித்துக் கொண்டிருந்தாள். அன்று நடந்த பாதுகாபட்டாபிஷேக நாடகத்தில் அவள்தான் சீதையாக வந்தவள். திரை போடப்பட்டவுடன் கணக்கற்ற கல்லூரி மாணவ மாணவியர் கூட்டம் அவள் இருப்பிடம் தேடி வந்து பாராட்டுத் தெரிவித்தது. "அப்பா! எத்தனை வேஷப் பொருத்தம்! சீதா தேவியே நேரில் பிரத்யட்சமாகி விட்டது போலிருந்தது! பாட்டு, அழகு, நடிப்பு...ஒன்றை யொன்று மிஞ்சி விட்டது!......"

வத்ஸலா அவ்வளவுக்கும் வெறும் புன்னகையால் மட்டுமே நன்றி தெரிவித்து அனுப்பினாள். ஏன்? அவள் கண்கள் வேறு யாரையோ கூட்டத்தில் துழாவிக் கொண்டிருந்தன.

நாடகத்துக்கு அவசியம் வரும்படியாகத் தன் கணவன் சேகருக்குக் கடித மூலம் ஆசை பொங்க அவள் அன்புக் கட்டளை விடுத்திருந்தாள். ஆனால் அவள் ஆசையை நிறைவேற்ற அவன் வரவில்லை. வந்திருந்தால் இத்தனை நேரம் அவளைக் காண வராமலா இருந்திருப்பான்? ஒரு வாரத்துக்கு முன்புதான் அவர்களுக்கு விவாகம் நடந்தது! கல்யாணத்தில் கேலியும் குறும்புத்தனமும் செய்து திணற வைத்த உறவினர்களின் கூட்டத்திடையே அவனை அவளால் எங்கே தைரியமாக நிமிர்ந்து பார்க்க முடிந்தது? பேச்சு!...அதை அந்தச் சந்தர்ப்பத்தில் நினைத்துப் பார்க்கவும் முடியவில்லையே! அந்த நாள் முதல் அவள் மன அரங்கத்தை ஆட்டி அலைக்கழிக்க வைத்துக் கொண்டிருக்கும் அவனிடம் நிம்மதியுடன் பேசி மகிழ, ஒரு ஒப்பற்ற சந்தர்ப்பமாக அன்றைய தினத்தைத் தேர்ந்தெடுத்தல்லவா அவனைக் கல்லூரி நாடகத்துக்கு வரும்படி யழைத்திருந்தாள்!

அவன் ஏன் வரவில்லை? அவளது உள்ளத் துடிப்பு அவனுக்கில்லையா? அல்லது அப்படித் தொலையாத அலுவல் என்ன இருந்திருக்கும், அவளது அன்பு செறிந்த வேண்டுகோளைப் புறக்கணிக்கும்படி?

அறைக்கு வெளியே காலடி யோசை கேட்டது. அவரா?...... வத்ஸலா அதி ஆவலுடன் நிமிர்ந்தாள். ஆனால் ஏமாற்றம்! தமிழ் வித்வான் கோதண்டம்!

"...உன் கணவர் வந்திருக்கிறார், வத்ஸலா! வாசலில் காருடன் காத்துக்கொண்டிருக்கிறார் உனக்காக. சட்டுப் புட்டென்று வேலைகளை முடித்துக்கொண்டு உன்னை வரச் சொன்னார்..."

"என்ன, ஸார்! அவர் நாடகத்துக்கு வந்திருந்தாரா?" வத்ஸலாவின் முகத்தில் மலர்ச்சி பரவிச் சிவக்க வைத்தது. சற்று முன் அவனைப்பற்றி எத்தனை தவறாக நினைத்து விட்டாள் அவள்?

தோளில் பையுடன், காலில் செருப்புகளைத் திணித்துக் கொண்டு அவசரம் அவசரமாக வாயிற்புறம் விரைந்தாள்.

நன்றாக இருட்டி விட்டபடியால் எங்கும் காரிருள் படர்ந்திருந்தது. வானத்தில் சந்திரன் இன்னும் உதயமாகவில்லை. மின்மினிப் பூச்சிகளைப் போல் நக்ஷத்திரங்கள் இங்கொன்றும், அங்கொன்றுமாய்க் கண் சிமிட்டி மினுக்கிக் கொண்டிருந்தன. கல்லூரித் தோட்டத்திலிருந்த புஷ்பச் செடிகளிலிருந்து 'கம்' என்று மிதந்து வந்த ரம்மியமான வாசனையை நுகர்ந்தவாறே ஓரமாக நின்றிருந்த காரை அணுகினாள்.

"எத்தனை நேரம், வத்ஸலா! ம்...ஏறு, சீக்கிரம்!"—தன் பெயரைச் சொல்லி அழைத்ததிலிருந்துதான், தன் கணவன் டிரைவர் ஆசனத்தில் அமர்ந்திருக்கிறான் என்பதை அவளால் சரியாகப் புரிந்து கொள்ள முடிந்தது.

"ஒரே தலைவலி ஜுரம். ஜலதோஷம். நீ வரிந்து வரிந்து எழுதி யிருந்தாயே என்றுதான் வந்தேன்..." என்று கூறிய சேகரின் குரல் கரகரத்திருந்தது. தலையை

யும் கழுத்தையும் சுற்றி நன்ருக 'மப்ளர்' கட்டியிருந்தான்.

"அப்பப்பா! அவன் குரலில்தான் என்ன கண்டிப்பு! மாடியிலிருந்து அவன் இறங்கி வரச் சிறிது நேரம் பிடித்து விட்டதே என்பதற்காகவா? இந்தச் சிறிய விஷயத்துக்கா இத்தனை கண்டிப்பு? புது மனைவியை முதல் முதல் தனித்துச் சந்திக்கும் வாய்ப்பு கிட்டியிருக்கும்போது நடந்து கொள்ளும் முறையா இது?

"ஏன் நிற்கிருய்? ஏறு!......உன்னைக் கொண்டு விட்டுவிட்டு மாம்பலம் நான் போக வேண்டாம்? மணி ஒன்பது!......" அதே கரகரத்த குரல்! அவன் முகம் நோக்காமலே பேச்சு!

"நீங்கள் வந்திருப்பதே தெரியாது. ஓசைப் படாமல் இங்கு வந்து உட்கார்ந்திருக்கிறீர்களே......!" முன் பக்கத்துக் கதவைத் திறந்தாள், அவன் பக்கத்தில் அமரும் எண்ணத்தில்.

"......ஹூம். அப்படி உட்கார்! ......... பின் பக்கத்தில்......!"

இதென்ன எதிர்பாராத அதிர்ச்சி? என்ன வந்து விட்டது சேகருக்கு?

ஒரே திகைப்பு!

கார் 'விர்' ரென்று கிளம்பியது. சிலு சிலுவென்ற ரம்மியமான காற்று. சாலை ஓரத்தில் மெர்க்குரி விளக்குகளின் குளுமையான ஒளி நாலா பக்கமும் வீசியது.

"நாடகம் எப்படியிருந்ததென்று சொல்லவேயில்லையே! நம் விவாகத்துக்குப் பின் நாம் தனித்துப் பேசி மகிழ முதல் வாய்ப்பல்லவா இது? ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்? இன்று என் நடிப்பு எப்படி?" வத்ஸலா அவனிடம் குழையக் குழையப் பேசினள்.

"கேட்க வேண்டுமா? உன் அன்புக்குகந்தவன் ராமர் வேஷம் தாங்க, அவன் தர்மபத்தினியாக நீ நடிக்க அந்த உற்சாகத்தில் உன் நடிப்பு சோடையாகவா போய் விடும்?" அவன் கேள்வி வத்ஸலாவின் மூளையை உரசியது.

"...என்ன?...என் அன்புக்குகந்தவனு?"

"இப்போது என்னிடம் இன்னெரு நாடகம் நடிக்காதே!"

"தயவு செய்து விளக்கமாகச் சொல்லுங்கள்! எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை!" அழுகை இலேசாகக் குரலில் ஒலித்தது.

"இன்றையக் கல்லூரி நாடகத்தில் ராமர் வேஷம் தரிப்பது உன்பட எல்லோரும் மாணவிகள் என்றல்லவா எனக்கு எழுதியிருந்தாய்? ஆனல் இன்று ராமராக நடித்தது ஒரு மாணவன் அல்லவா? நாடகம் பார்க்கையில் தோன்றிய சிறிது சந்தேகத்தையும் அப்போதே விசாரித்துத் தீர்த்துக் கொண்டு விட்டேன், ராமர் வேஷம் தரித்தவன் ஆண்தான் என்பதை! இனிமேல் என்னிடம் புருக முடியாது நீ. இதை என்னிடம் முன் கூட்டியே அறிவித்து அனுமதி வாங்க வேண்டாமா நீ! ஏன் சொல்லவில்லை? இதைக் கடிதத்தில் கூட எழுதாமல் மறைக்க வேண்டிய காரணம்?" அவன் வார்த்தை வார்த்தையாகக் கக்கினன். அவன் மனத் தாங்கலின் காரணம் இதுதானு? வத்ஸலாவுக்கு எல்லாம் விளங்கி விட்டது.

"இதோ பாருங்கள், அவசரப்பட்டு என்னிடம் சினம் கொள்ளாதீர்கள். உங்களுக்கு உண்மையில் நடந்தது என்னவென்று தெரியுமா? 'மேக்கப்' செய்து கொள்வதற்காக இன்று நான் மூன்று மணிக்கு இங்கே வந்தேன். அப்பொழுது தான் தமிழ் வித்வான் கோதண்டம் என்னிடம் விஷயத்தைச் சொன்னர். ராமராக நடிக்க நியமிக்கப்பட்டு, ஒத்திகையின்போதெல்லாம் என்னுடன் நடித்த மாணவி கமலாவுக்குத் திடுதிப்பென்று கடுமையான ஜுரம் கண்டு விட்டதாம். அதனல் நாடகத்தை நிறுத்திவிட வேண்டி வருமோ என்று அவர் சஞ்சலப் பட்டுக் கொண்டிருந்தாராம். இதே கல்லூரியில் இதே நாடகம் இரண்டு வருடங்களுக்கு முன்பு, முழுவதும் மாணவர்களாலேயே நடத்தப் பெற்றதாம். அப்போது ராமராக நடித்த பழக்கமிருந்ததால் ஆசிரியர் கோதண்டத்தின் கவலையைத் தீர்க்க அவன் முன் வந்தானும். தான் அவனுக்குப் பதிலாக நடித்து நாடகத்தை ஒப்பேற்றி விடுவ





பெப்ருவரி 23-ஆம் தேதியன்று மதராஸ் அட்வர்டைஸிங் கம்பெனி மானேஜர் ஸ்ரீ ஜயராமன் அவர்களின் மருமானும் அஸோஸியேடட் பிரிண்டர்ஸைச் சேர்ந்த ஸ்ரீ சூரியின் குமாரனுமான சிரஞ்சீவி வேங்கடராமனுக்கு உபநயன முகூர்த்தம் சிறப்பாக நடைபெற்றது!

தாகக் கூறினும், நான் மறுத்துத்தான் பார்த்தேன். கடைசி நிமிஷத்தில் அதற்கு மேல் ஆசிரியரை என்னால் எதிர்க்க முடியவில்லை. வேறு வழியில்லாமல் விதியே என்றுதான் நடித்தேனே யொழிய அந்த மாணவனின் முகத்தை நான் ஏறிட்டுக் கூடப் பார்க்கவில்லை; ஒரு வார்த்தை பேசவுமில்லை. நாடகம் முடிந்த பின்னும் நான் அவனைப் பார்க்கவில்லை. அவனை எனக்கு முன்பின் தெரியவும் தெரியாது. அவன் என் அன்புக் குரியவனும் இல்லை. என்னைத் தவறாக நினையாதீர்கள் !''

வத்ஸலா மூச்சு விடாமல் பேசினாள். கரங்களால் முகத்தை மூடி விசிக்க ஆரம்பித்து விட்டாள்.

''வத்ஸலா !...கீழே இறங்கு !'' காரை நிறுத்திய சேகரின் உத்தரவு அவளுக்குக் கர்ண கடூரமாக ஒலித்தது.

அவள் உடலில் இனந்தெரியாத திகிலும் நடுக்கமும் ஏற்பட்டன. அவள் இறங்கிய பின் சேகர் இறங்கினான். மப்ளர், மேலே போர்த்தி யிருந்த டவல் எல்லாவற்றையும் காருக்குள் எறிந்தான். வத்ஸலாவின் முக வாயைப் பிடித்து நிமிர்த்தினான். ''விளக்கு வெளிச்சத்தில் பார்த்துச் சொல். உன்னுடன் ராமராக நடித்தது உன் அன்புக் குரியவனா, இல்லையா?'' என்று கேட்டான்.

வத்ஸலா பிரமிப்பில், திகைப்பில், சிலையாகி விட்டாள். சேகரை விளக்கொளியில் தலை முதல் கால் வரை ஏற இறங்கப் பார்த்தாள். ஒருதரம்! இரண்டுதரம்!... இதென்ன? முகத்தில் 'மேக்கப்'! ராமபிரானின் மேனி நிறத்தைக் குறிக்கும் நீல நிறப் பவுடர் அல்லவா அவன் உடல் முழுவதும் காட்சியளித்தது! இப்போது பேசும் குரல் எங்கே? அப்படியானால்?......அப்படியானால்?......

''வத்ஸலா! சற்று முன் நாடகத்தில் உன்னோடு நடித்த ராமபிரான் நான்தான்! என்ன? என்ன? ஏதோ இந்திர ஜாலம் போல் தோன்றுகிறதோ? நம்முடைய முதல் சந்திப்பிலேயே உன்னைப் பெரும் கலக்கத்துக்குள்ளாக்கி விட்டேன். மன்னித்து விடு! எல்லாம் வெறும் தமாஷ்! 'மேக்கப்'பைப் பார்த்துக் கண்டு பிடித்து விடுவாயோ என்றுதான் உன்னைப் பின் வீட்டில் அமரச் சொன்னேன். நீ படிக்கும் கல்லூரியிலேயேதான் இரண்டு வருடங்கள் முன்பு நானும் படித்தேன். அப்போது ராமபிரானாக நடித்ததும் நான்தான்! இப்போது உன் கல்லூரிப் பழைய மாணவன் நான்! கோதண்டம் என் பிரியமான ஆசிரியர்! என்னை எதேச்சையாக அன்று சந்தித்தவர் விஷயத்தைச் சொன்னார். சீதை நீதான் என்பதால் ஒப்புக் கொண்டேன். இந்தத் தமாஷ் செய்ய உன்னிடம் விஷயத்தைச் சொல்ல வேண்டாமென்று அவரை முன்பே எச்சரித்திருந்தேன்.

''நீ எங்கே அடையாளம் கண்டுகொண்டு விடுவாயோ என்று கூடப் பயந்தேன். இப்பொழுது தான் தெரிகிறது, என் வத்ஸலா பரம சாது என்று!'' என்றான்.

வத்ஸலா நிம்மதியாக மூச்சு விட்டாள்.

''நீங்கள், உங்கள் முகம், குரல் எல்லாமே எனக்குப் புதிது. ஏமாந்து விட்டேன். அதிலும் வேஷம் தரித்துக் கொண்டபின் நீங்கள் சாயலில் எப்படி மாறிவிட்டீர்கள்! என்னை இத்தனை தவிக்க விட்டது நியாயமா?'' என்று கேட்டாள்.

''ராமர் வேடம் தரித்தவன் என் அன்புக் குரியவனில்லை என்று நீ ஓரேயடியாகச் சாதித்தாயே, அது மட்டும் நியாயமா?''

நாணயங்கள் பொழிவதுபோல அவன் கலகலவென்று நகைத்தான்.

காற்று சுகமாக வீசிக் கொண்டிருந்தது. ''உம்! காரில் ஏறு!'' என்றான் சேகர்.

''பின் வீட்டில் தானே?'' தலையைச் சாய்த்தபடி கேட்டாள் வத்ஸலா.

''போக்கிரி!'' அவள் கையைப் பிடித்துக் காரில் முன் பக்கத்தில் தன்னருகில் அமர்த்திக் கொண்டான் சேகர். கார் காற்றிலும் கன வேகமாகக் கிளம்பியது.



## 'கோலினஸ்' உங்கள் பற்களை சுத்தம் செய்வது தவிர, மேற்கொண்டும் உதவுகிறது!

### இப்பொழுதே இந்த நூதன டூத்பேஸ்டை நீங்கள் உபயோகிக்கத் தொடங்குவது நலம்

ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த 'கோலினஸ்' பற்களை சுத்தமாக்குவதுடன் நிற்பதில்லை! இந்நூதன டூத்பேஸ்ட் பல் சிதைவுக்குக் காரணமான கிருமிகளை ஒழித்து, ஈறுகளை உறுதியாக்கி, உங்கள் சுவாசத்தை மணிக்கணக்கில் புதுமணம் கமழ வைத்திருக்கிறது.

இதன் ரகசியம் அற்புதமான 'கோலினஸ்' நுரைதான். அது ஆக்டிவ் க்ளோரோபில்லை வாயில் பிரஷ் நுழைய முடியாத மூலை முடுக்குகளுக்கும் எடுத்துச் சென்று, உங்களுக்கு மிகுந்த அனுகூலம் தருகிறது.

**அதிசயமான சிக்கனம்!**

ஈரமில்லாத பிரஷில் அரையங்குல அளவே தேவை. எனவே ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த 'கோலினஸ்' உபயோகிப்பது உங்களுக்கு எவ்வளவு லாபகரம் பாருங்கள்! இன்றே ஒரு பெரிய டியூப் வாங்கவும்.





மனித உள்ளம், மனித உள்ளத்தோடுதான் ஒட்டும் என்பதில்லை. ஆறறிவில்லாத இனத்தோடுகூட இந்த உள்ளம் உறவாடிவிடும். இது உள்ளத்தின் தன்மை. இதன் போக்குக்குக் காரண காரியங்களை ஆராய்ந்து கொண்டிருக்க முடியாது. இது விஞ்ஞான ஆராய்ச்சிக்கும், பகுத்தறிவின் தர்க்கத்துக்கும் அப்பாற்பட்ட விஷயம்! இல்லாவிட்டால் ரங்கனுக்கும் அந்தக் குரங்குக்கும் அவ்வளவு அந்நியோன்யம் ஏற்படுவானேன்?

கோவில்பட்டியில் பஞ்சம் சூழ்ந்தபோது வாழ வழி தேடித் திருநெல்வேலிக்கு வந்தான் ரங்கன். திருநெல்வேலி மண்ணில் கால் வைத்த நாளாக அவனுக்குக் கிடைத்ததெல்லாம் தாமிர வருணியின் தெளிந்த நீர்தான். மாமனார் வீடா இருக்கிறது, அவனை வரவேற்று விருந்தளிக்க? இவ்வுலகத்தில் யாருமற்ற அனாதையின் கதியே அதுதானே?

அன்று தாமிரவருணித் தண்ணீரை அள்ளக் குடித்து விட்டு ஆற்றங்கரை மருத மரத்தடியில் துண்டை விரித்துப் படுத்தான்.

படுத்தவாறே சிந்தித்தான். சிந்தனையில் வருங் காலம் உருவாக வில்லை. கடந்த காலம்தான் சுழன்றது.

அவன் ஏன் பிறந்தான்? இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லப் பரமாத்மாவினாலும் ஆகாதே! அப்படி யிருக்கும் பொழுது அந்த அநாவசியக் கேள்விக்குப் பதிலைத் தேடிக் கொண்டு நாம் குழம்புவானேன்?

அவனுடைய பத்தாவது வயதில் அவனைப் பெற்றவன் போய் விட்டான். தந்தையைப் பற்றிய தகவலே அவனுக்குத் தெரியாது. அவன் போன பிறகு ரங்கன் தனியன் ஆனான். தனிமை அவனை வாட்டி வதைக்க வில்லை. வயல் வெளிகளில் கிடைத்த வேலைகளைச் செய்து வயிற்றுப் பாட்டைப் பார்த்துக் கொண்டான். இருபதாவது வயதில் பஞ்சம் தாண்டவமாடத் தொடங்கவே, அவன் அந்த ஊரை விட்டுக் கிளம்பினான். கோவில்பட்டியில் அவனுக்கு என்ன இருக்கிறது? ஏதோ அங்கு பிறந்தான், வளர்ந்தான். ஆனால் வாழ வழியில்லை. எனவே, வாழ வழி தேடித் திருநெல்வேலிக்கு கடந்தான்.

இனி என்ன செய்வது? அதைப் பற்றித்தான் அவன் அன்று சிந்தித்தான்.

# இதய ரகசியம்

சாது

சிந்தனை ஒரு வழியும் காட்டவில்லை. புரண்டு படுத்தான். சற்றுத் தூரத்திலிருந்த மாமரத்தின் அடியில் ஒரு குரங்கு உட்கார்ந்து கொண்டு அவனையே பார்த்துக்கொண்டிருந்தது. ரங்கனும் அதை உற்றுப் பார்த்தான். அது பல்லை இளித்தது. மடியில் கட்டியிருந்த பொரி கடலையை அதன் முன்னே தூவினான். குரங்கு அவனை நோக்கி வந்தது. சிதறிக் கிடந்த கடலையைப் பொறுக்கிச் சாப்பிட்ட பின் மீண்டும் அவனைப் பார்த்தது. இன்னும் கொஞ்சம் கடலையை எடுத்து அதன் பக்கத்தில் தூவினான். குரங்கும் தைரியமாக அவன் பக்கத்தில் வந்தது.

ரங்கன் சிந்தித்தான். எப்படிப் பிழைத்தாலென்ன? ஜனங்கள் எப்படி யெல்லாமோ பிழைக்கிறார்களே! நாம் இப்படிப் பிழைத்தால் என்ன?

திடீரென்று பாய்ந்து குரங்கைப் பிடித்துக் கொண்டான். பாவம், குரங்கு திணறியது. கடலையைத் தந்தவன் கடுமையாக நடந்து கொள்வான் என்று அது எதிர்பார்க்கவில்லை. திமிறியது, கத்தியது, கடிக்கக்கூட முயன்றது. ஆனால் ஒன்றும் பலிக்கவில்லை. கடைசியில் அவனுக்கு அடிமையாகி விட்டது.

நாளடைவில் ரங்கனிடம் அந்தக் குரங்கு பல வித்தைகளைக் கற்றுக் கொண்டது. துணையின்றி வாழ்ந்த ரங்கனுக்குக் குரங்கு துணையாக வந்து சேர்ந்தது.

அப்பொழுது அறுவடைக் காலம். ரங்கன் களத்து மேட்டை நோக்கி நடந்தான். அறுவடைச் சமயத்தில் களத்து மேட்டில் குரங்கு ஆட்டி வேடிக்கை காட்டினால், கொஞ்சம் நெல் கிடைக்கும்.

களத்து மேட்டுக்குத் தென்புறம் வந்து கொண்டிருந்த போது நாவல் மரத்தின் மீதிருந்து "குர்" என்று சப்தம் வந்தது. ரங்கன் அண்ணாந்து பார்த்தான். ஒரு பெண் குரங்கு மரத்தின் மேலிருந்து நாவல் பழத்தை ருசி பார்த்துக் கொண்டிருந்தது. ரங்கனின் குரங்கான ராமனும் அதைப் பார்த்தது. ராமனை நோக்கி அந்தப்பெண் குரங்கு ஒரு பழத்தை விட்டு எறிந்தது. ராமன் அதை எடுத்து வாயில் ஒதுக்கிக் கொண்டு மீண்டும் மேலே பார்த்தது. ரங்கன் நடந்தான். ஆனால் ராமன் அசையவில்லை அதன் பார்வை யெல்லாம் மரத்தின் மீதிருந்த பெண் குரங்கின் மீதே இருந்தது. ரங்கன் அதைக் கரகரவென்று இழுத்துக் கொண்டு களத்து மேட்டுக்குப் போய் விட்டான்.

"குரங்கைக் கொஞ்சம் கரணம் போடச் சொல்லேன், பார்க்கலாம்!" என்ற குரலைக் கேட்டுத் திரும்பினான் ரங்கன்.

மாமரத்தடியில் ஒரு இளம் பெண் உட்கார்ந்திருந்தாள். களத்து மேட்டுக்கு வரும் கூலியாட்களுக்குப் பலகாரம் விற்பதற்காக அவள் வந்திருந்தாள். ரங்கன் அவளையே இமைக்காமல் பார்த்தான். அவள் குனிந்து கொண்டாள்.

"கரணம் போடடா, ராமா!" என்றான் ரங்கன், சிரித்துக் கொண்டே. ராமன் அநாயாசமாகப் பல குட்டிக் கரணங்கள் போட்டுக் காட்டியது.

"உன் குரங்கு மிக நன்றாகப் பழகியிருக்கிறதே! இந்தா, இதை வைத்துக் கொள்!" என்று கூறி அந்தப் பெண் ஒரு அணாவை ரங்கனிடம் நீட்டினாள்.

"வேண்டாம்!" என்றான் ரங்கன்.

"சரிதான், போ! நீ இப்படிச் சும்மாவித்தை காட்டினால் உனக்குக் காசு எங்கே கிடைக்கும்?" என்றாள் அந்தப் பெண்.

"எல்லாருக்குமே சும்மா காட்டுவேனா? உனக்கு மாத்திரம்தான் சும்மா காட்டினேன்!" என்றான் ரங்கன்.

அவள் சிரித்தாள். அவனும் சிரித்தான்.

"ஆமாம், உன் பெயரென்ன?" என்று மெதுவாகக் கேட்டான் ரங்கன்.



பெப்ருவரி மீ 29ல் திருச்சி பைன் ஆர்ட்ஸ் கழகத்தார் திருவாவடுதுறை நாகஸ்வரச் சக்கரவர்த்தி திரு டி. என். ராஜரத்தினம் பிள்ளை அவர்களுக்குப் பொன்னாடை போர்த்திப் பாராட்டினார்கள். சபைக் காரியதரிசி டாக்டர் வி. கே. ரங்கநாதன் பொன்னாடை போர்த்துகிறார்.



அவள் ஒரு கவலையுற்ற தாயாராக விருந்தாள் - இது அவளுடைய முதல் குழந்தை - அவனோ எப்பொழுதும் அசௌகரியத்துடன் கதறிய வண்ண மிருந்தான் - அவனுடைய எடையில் மாறுதலே இல்லை -வளர்ச்சியே கிடையாது.





ஒரு நாள், சந்தோஷமாயும், திடமாயுமுள்ள தன் குழந்தையுடனிருக்கும் தன் சிநேகிதியை விசாரித்தாள். விசேஷ மென்னவென்றால் சிநேகிதியின் குழந்தையும் அவளுடைய குழந்தையும் ஒரு வயதுக் குழந்தைகள்!

சிநேகிதி சொன்னாள் "என் குழந்தைக்கு 'க்ளாக்ஸோ' கொடுக்கிறேன்". 'க்ளாக்ஸோ' சுத்தமான புஷ்டியூட்டும் பால் – உணவு. குழந்தைகளின் எலும்புகளும், பற்களும் உறுதியாக வளர 'விடமின் டி'யும் ரத்தம் வளம் பெற இரும்புச் சத்தும் சேர்க்கப்பட்டுள்ளன.






அந்தத்தாயார் அன்றைக்கே 'க்ளாக்ஸோ' கொண்டு வந்தாள். இப்பொழுது குழந்தையைப் பாருங்கள். அவன் குதூகலத்துக்கு அளவில்லை. அயர்ந்து தூங்கவும் செய்கிறான்! எடையும் நிதானமாக அதிகரித்துக்கொண்டு வருகிறது. 'க்ளாக்ஸோ'வுக்கு நன்றி.

Glaxo

'க்ளாக்ஸோ'–குழந்தைகளின் மிகச் சுத்தமான பால்-உணவு

D. 24

"செல்லம்!" என்று நாணிக் கோணிக் கொண்டே கூறினள் அந்தப் பெண்.

அதன் பிறகு இருவரும் தினமும் சந்தித்தார்கள். செல்லத்துக்கு ரங்கன் குரங் காட்டியாக இருப்பது பிடிக்கவில்லை. அத் தொழிலை விட்டு விடும்படி கூறினள். அவன் கூறி விட்டான் என்பதற்காக அவன் ராமனைப் பிரிந்து விடுவதா?



சமீபத்தில் சென்னை துப்பறியும் போலீஸ் இலாகாவினர் "சதிகாரர்கள்" என்ற நாடகத்தை வெகு சிறம்பட நடத்திச் சபையோர்களின் பாராட்டுதல்களைப் பெற்றார்கள்.

செல்லம் இன்று வந்தவள். ஆதியில் ராமன் தானே ரங்கனுக்குத் துணையாக வந்தது? ஒரு பெண்ணுக்காகத் தன்னிடம் அன்பு செலுத்தும் மற்றொரு ஜீவனைப் பிரிவதா? ரங்கனுக்கு மனம் கேட்கவில்லை.

செல்லம் அவனோடு பேசுவதை நிறுத்தி விட்டாள். அவன் விம்புக்கெதிரே அவள் விம்பு நிற்கவில்லை. ஒரு நாள் அவனாகவே செல்லத்தை நெருங்கி, "என்ன, செல்லம்! என்மேல் உனக்குக் கோபமா?" என்று கேட்டான்.

"நீ இந்தக் குரங்கைக் கட்டிக் கொண்டு அழும் வரைக்கும் நான் உன்னோடு பேசப் போவதில்லை!" என்றாள் செல்லம், முகத்தைச் சுளித்துக் கொண்டு.

ரங்கனின் இதயத்தையே நொறுக்குவது போலிருந்தன அந்தச் சொற்கள். ராமனை உற்றுப் பார்த்தான். அது நாவல்மரத்தைப் பார்த்துக் கொண்டிருந்தது. நாவல் மரத்திலிருந்த பெண் குரங்கு ராமனைப் பார்த்துக் கொண்டிருந்தது. ரங்கன் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான். உள்ளத்தில் அமைதியில்லை. ஒரே குழப்பம்!

அன்று இரவு ரங்கனும் தூங்கவில்லை. ராமனும் தூங்கவில்லை. இருவருக்கும் ஒரே நினைவுதான்!

ரங்கனின் சிந்தனையெல்லாம் செல்லத்தையே சுற்றி வந்தது. அவனறிய அந்த மாதிரி அனுபவத்தை அதற்கு முன் அவன் பெற்றதில்லை. புரிந்து கொள்ள முடியாத உணர்ச்சி அலைகள் பொங்கி எழுந்தன.

அவனுடைய வாழ்க்கையிலேயே அன்பை உணர வைத்தது ராமன். ஆனால் செல்லம் அதையும் மீறிய வெளியேற முடியாத ஒரு போதையை யல்லவா கொடுக்கிறாள்! அந்தப் போதையில்தான் எத்தனை வெறி, எத்தனை சுகம்! அவன் அறிவு மயங்கியது.

வெளியில் ராமன் கத்திக் கொண்டிருந்தது. அந்தப் பெண் குரங்கைக் கண்ட தினத்திலிருந்து ராமன் இப்படித்தான் கத்துகிறது. கட்டியிருந்த கயிற்றிலிருந்து விடுபட முனைந்து கொண்டிருந்தது.

ரங்கன் மெதுவாக ராமனிடம் வந்தான். சிறிதுநேரம் ராமனையே பார்த்தான். பிறகு ராமனை அவிழ்த்து விட்டான். உடனே ராமன் தென்புறமாக ஓடியது! ரங்கனைத் திரும்பியே பார்க்கவில்லை. இனி அதற்கு ரங்கன் தேவையில்லை. அதற்குத் துணையாகத் தான் பெண் குரங்கு கிடைத்து விட்டதே!

ராமன் மறையும் வரை ரங்கன் பார்த்துக் கொண்டே நின்றான். இனி அவனுக்கும் அந்தக் குரங்கு தேவையில்லை. செல்லம்தான் இருக்கிறாளே!

மறு நாள் செல்லத்தைப் பார்க்கக் களத்து மேட்டுக்குச் சென்றான். களத்துக்குப் பக்கத்திலிருந்த நாவல் மரத்தின் கிளையில் ராமனும், அந்தப் பெண் குரங்கும் உட்கார்ந்திருந்தன.

"ராமா, வா! வா, ராமா!" என்று ரங்கன் கூப்பிட்டான். ராமன் வரவில்லை. ஒரு நாவல் பழத்தை அவன் பக்கம் வீசியது. ரங்கன் களத்து மேட்டை நோக்கி வேகமாக நடந்தான்.

"செல்லம்! நீ சொன்னபடி ராமனை அவிழ்த்து விட்டு விட்டேன்!" என்றான். இதைச் சொல்லும் போது ரங்கனுக்கு வேதனையாக இருந்தது.

"அப்பா! சனி தொலைந்தது!" என்றாள் செல்லம், சிரித்துக் கொண்டே. அந்தச் சிரிப்பில் ரங்கனின் உள்ளம் பம்பரமாகச் சுழன்றது. அந்த மயக்கத்தில் விழி கொட்டாமல் அவளையே பார்த்தான். அவளும் அவனையே பார்த்தாள்.

ரங்கனுக்குக் குரங்கின் துணையை விட ஒரு பெண்ணின் துணை இனித்தது. அந்தக் குரங்கையே மறந்து விட்டான்.

ராமனும், ரங்கனை மறந்து விட்டது! இதுதானே உலக இயல்பு!

செல்லத்தினிடம் கல்யாணப் பேச்சை எப்படி ஆரம்பிப்பது என்பது தான் ரங்கனுக்கு விளங்க வில்லை.

உள்ளங்கள் உறவாடினாலும், இருவரும் பிரிந்து தானே வாழ்கிறார்கள்! அவளது மென்மையான கரத்தை ஆவலோடு பற்ற ரங்கனுக்குத்தான் எத்தனை ஆசை!

எப்படியும் அவளிடம் கல்யாணத்தைப் பற்றிப் பேசி விடவேண்டியது என்ற முடிவுடன் அன்று அவன் புறப்பட்டான். தூரத்தில் செல்லம் வந்து கொண்டிருந்தாள். அவளோடு யாரோ ஒரு வாலிபனும் வந்து கொண்டிருந்தான்.

அந்தக் காட்சியைக் கண்டதும் ரங்கனின் உள்ளம் அமைதி யிழந்து தவித்தது.

சந்தேகப்பட்டுச் செல்லத்தை ஒன்றும் கேட்கக் கூடாது என்றே அவன் எண்ணினான். ஆனாலும் மனம் கேட்க வில்லை. அவளைத் தனிமையில் சந்தித்ததும், "உன்னோடு ஒருவன் வந்தானே, அவன் யார்?" என்று கேட்டு விட்டான்.

"எங்களுக்குத் தூர பந்து!" என்று செல்லம் எங்கோ பார்த்துக் கொண்டு சொன்னாள்.

"என்ன செய்கிறான்?"

"பட்டாளத்திலிருந்து வந்திருக்கிறார்!"

"அப்படியா?"

"அவர் ரொம்ப நல்லவர்" என்றாள் செல்லம். அதைக் கூறும் பொழுது செல்லத்தின் முகம் மலர்ந்தது; ரங்கனின் இதயம் அதைக் கேட்டுக் கருகியது.

"செல்லம்! இனிமேல் நீ அவனோடு பழகக் கூடாது" என்று ரங்கன் கடுமையாக உத்தரவிட்டான்.

அவளுக்குக் கட்டளையிட அவன் யார்? அவனுக்கு ஏது உரிமை? அவன் தனக்கு ஏதோ உரிமை யிருப்பதாகத் தானே தவறாக மதிப்பிட்டுக் கொண்டு விட்டான்.

செல்லம் திகைத்தாள். பிறகு "பழகினால் என்னவாம்?" என்று கேட்டாள்.

"எனக்குப் பிடிக்கவில்லை!" என்று பதிலளித்தான் ரங்கன்.

அன்று இருவரும் சரியாகப் பேசிக் கொள்ளவில்லை. இருவர் மனத்திலும் விதம் விதமான எண்ணங்கள்!

மறுநாள் காலையில் செல்லம் களத்து மேட்டுக்குப் புறப்பட்டாள். பாதி வழியில் பட்டாளத்துக்காரன் சேர்ந்து கொண்டான். இருவரும் சிரித்துச் சிரித்துப் பேசிக் கொண்டே நடந்தார்கள். தொலைவிலிருந்து இக்காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்த ரங்கனின் இரத்தம் கொதித்தது. இதயத்தில் வேதனை புகுந்து கொண்டது. உலகமே அவனை வெறுப்பதாகப் பிரமை தட்டியது.

இன்று மாலைக்குள் செல்லத்தைச் சந்தித்து 'உண்டு, இல்லை' என்று ஒரு முடிவு கட்டிவிடுவது என்று தீர்மானித்துக் கொண்டான். இருந்தாலும் அலைபாய்ந்த உள்ளத்துடன் அன்று பகல் முழுவதும் கால் போன வழியே எங்கெங்கெல்லாமோ சுற்றினான். தீர்மானித்தபடி அன்றுமாலை அவள் குடிசை வாசலை அடைந்தபொழுது, பக்கத்து வீட்டுச் சிறுவன் ஓடி வந்தான்.

"அக்கா பட்டாளத்துக்காரருடன் அவர் ஊருக்குப் போய் விட்டாள். திரும்பி வர மாட்டாளாம். உங்களிடம் சொல்லச் சொன்னாள்!" என்று அதிர்ச்சி தரும் செய்தியைக் கூறினான்.

ரங்கன் இடிந்து போய் உட்கார்ந்து விட்டான். அதுவரை அழுதே யறியாத ரங்கன் அழுதான். எதற்காக அழுதான்?

செல்லம் போய் விட்டாளே என்பதற்காகவா? செல்லத்தை நம்பி ராமனைப் பிரிந்தானே, அதற்காகவா? கொண்ட ஆசையெல்லாம் அழிந்து விட்டதே என்பதற்காகவா? உலகத்தில் மீண்டும் தனியனாகி விட்டோமென்பதற்காகவா? எதற்காக? அவனுக்கே தெரியவில்லை! அழுதான், அழுதான்; அப்படி அழுதான்.

சோர்ந்து போய் அவ்விடத்தை விட்டு வெளியே நடந்தான். கொஞ்ச தூரத்தில் ஒரு மரத்தினடியில் அந்தக் குரங்கு—அவனுடைய ராமன்—நின்று கொண்டிருந்தது. அதன் உடலில் காயம் பட்டு இரத்தம் கசிந்து கொண்டிருந்தது. அது ரங்கனைப் பரிதாபமாகப் பார்த்தது.

அந்தப் பார்வையில்தான் எவ்வளவு கனிவு இருந்தது!

ரங்கன் நின்று விட்டான். சுற்றுமுற்றும் பார்த்தான். அந்தப் பெண் குரங்கைக் காணவில்லை! அண்ணாந்து மேலே பார்த்தான். திகைத்து விட்டான். மரக் கிளையில் அந்தப் பெண் குரங்கோடு வேறு ஒரு ஆண் குரங்கு உட்கார்ந்திருந்தது! ரங்கனுக்கு உண்மை விளங்கி விட்டது!

புதிதாக வந்த ஆண் குரங்கோடு சேர்ந்து கொண்டு, ராமனைப் பெண் குரங்கு மரத்திலிருந்து கீழே தள்ளி விட்டது.

"ராமா!" என்று கூறிக் கொண்டே இரு கைகளையும் நீட்டினான் ரங்கன்.

ராமனுக்கோ நடக்க முடிய வில்லை. நொண்டி நொண்டி ரங்கனை நோக்கி வந்தது. ஓடிப் போய் அதைத் தூக்கிக் கொண்டான். அவன் கண்களிலிருந்து கண்ணீர் பெருகியது. ராமனைத் தோளில் சாய்த்துக் கொண்டான். அது அவனை இறுகப் பற்றிக் கொண்டது.

ராமனுக்கு உடலெல்லாம் வேதனை. ரங்கனுக்கு உள்ளமெல்லாம் வேதனை.

ஆனால் இரு ஜீவன்களுக்கும் தங்களுக்குப் பழைய துணை கிடைத்து விட்டதில் எல்லையற்ற ஒரு மகிழ்ச்சி.

# புதிது

எல்லாவிதத்திலும்
புதிது




புதிதும் நவீன கலைத்திறனால் செய்ததும்
புதிதும் காற்று தடைப்படாததுமான அமைப்பு
புதிதும் வலிமையுள்ளதுமான எந்திர அமைப்பு
புதிதும் அதிகப்படியுமாக்கின திறமை

## Orient

அமைதியாகச் சுற்றும் திடமான **விசிறி**

ஓரியண்ட் ஜெனரல் இண்டஸ்ட்ரீஸ் லிட்
6, கோர் பிபி லெயின், கல்கத்தா-11

டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:
மெஸர்ஸ் ஹிந்துஸ்தான் டீலர்ஸ் லிமிடெட், 4, ஸ்டிரிங்கர் தெரு, சென்னை



# கோர்ட்டில் குருவிகள்



ஜட்ஜ் சிவலிங்க நாடார் ஜில்லா கோர்ட்டில் வழக்கு விசாரித்துக் கொண்டிருந்தார். புதிதாக அந்த வேலையில் அமர்ந்திருந்த படியால் வெகு உற்சாகமாகச் சாட்சிகளுக்குக் கேள்விகள் போட்டு இருதரப்பு வக்கீல்களையும் தொந்தரவு செய்து கொண்டிருந்தார். புதிதாக அமுலுக்கு வந்த விவாகரத்துச் சட்டத்தின்படி ஏற்பட்ட ஒரு வழக்கு.

வாதி மனைவி. பிரதிவாதி புருஷன். விவாகமாகிப் பதினெட்டு மாதம் ஆகியிருந்தது. இந்தப் புருஷன் தனக்குப் பிடிக்கவில்லை, அவனுடைய குணங்கள் தன்னுடைய மனப்பான்மைக்கு ஒத்து வரவில்லை என்று மனைவியின் வழக்கு.



பிரதிவாதி இதை ஒப்புக்கொள்ளவில்லை. ஆட்சேபிக்கிறார். வாதி வக்கீல் சுப்பிரமணிய பிள்ளை சிறு வயது ஆனாலும் சாமர்த்தியசாலி. பிரதிவாதி வக்கீல் வாசுதேவய்யர் கிழவர். பழைய தினுசு.

சாக்ஷிகளின் விசாரணைக்கு மத்தியில் இரண்டு குருவிகள் கோர்ட்டுக்குள் மேலே ஜன்னலண்டை உட்கார்ந்து கொண்டு 'கிச' 'கிச' என்று சப்தம் போட்டுக் கொண்டிருந்தன.

வாசுதேவய்யருக்குச் சாக்ஷி சொன்னது சரியாகக் கேட்கவில்லை. அவர் காது கொஞ்சம் மந்தமோ, என்னவோ! ஆனபடியால் திரும்பத் திரும்ப "என்ன? என்ன?" என்று கேட்டுக் கொண்டிருந்தார்.

"இந்தக் குருவி உபத்திரவம் அதிகமாய்ப் போச்சு" என்றார் ஜட்ஜ் சிவலிங்க நாடார்.

"இப்படிப் பைத்தியக்கார மக்கள் விவாகரத்துக்கு வழக்குப் போடுகிறார்








களே என்று குருவிகள் சிரிக்கின்றன" என்று சொன்ஞர் வாசுதேவய்யர்.

இது சொன்னதும் குருவிகள் இன்னும் சிரிக்க ஆரம்பித்தன. வக்கீல் சொன்னது அவைகளுக்குத் தெரிந்து போய் விட்டது.

"என்ன? நீயும் கோர்ட்டுக்குப் போவாயோ?" என்றது ஆண் குருவி.

"ஒரு நாளும் போக மாட்டேன்" என்றது மனைவிப் பறவை.

இந்தக் குருவிகளின் தொந்தரவால் கேசு கெட்டுப் போகும்போல் தோன்றிற்று சுப்பிரமணிய பிள்ளைக்கு. வாசுதேவய்யர் சிரித்துக் கொண்டே சாக்ஷிகளைக் குறுக்கு விசாரணை செய்தார். வழக்கு விசாரணையை ஒத்திப் போட்டால் நல்லது என்று எண்ணி, 'தனக்கு ஏனோ தலை சுற்றுகிறது' என்று சொல்லி வாய்தாக் கேட்டார் வாதி வக்கீல்.

தலைக் கிறுகிறுப்பு என்று வாதி வக்கீல் சொன்னதும் பாவம், வாசுதேவய்யருக்கு ஆட்சேபிக்க இடம் இல்லாமல் போயிற்று. "இளைஞர்களுக் கெல்லாம் இப்படி வியாதிகள் வருவதற்குக் காரணம் என்ன?" என்று மட்டும் கேட்டார்.



"இவர்களுக்குக் குழந்தைகள் இல்லை போலிருக்கிறது. குழந்தைகள் இருந்தால் இப்படி வழக்குப் போடுவாளா மனைவி?" என்றது பெண் குருவி.

"அப்போதும் போடுவார்கள்" என்றது ஆண் குருவி.

பிறகு, "நமக்கு இந்த சகவாசம் வேண்டாம்" என்று சொல்லி ஆண் குருவி அவ்விடத்திலிருந்து கிளம்பிப் பக்கத்திலிருந்த ஆஸ்பத்திரிக் கட்டடத்துக்குப் பறந்து போயிற்று. பெண் குருவியும் கூடவே பறந்து போயிற்று.

"இந்தக் குருவிகளுக்குச் சீர்திருத்தச் சமாசாரமே தெரியவில்லை போலிருக்கிறது. அவர்களுக்கிடையில் பிரசாரம் செய்ய வேண்டும்" என்றது அங்கிருந்த ஒரு குரங்கு!




### திட்டத்தின் முன்னேற்றம் நெம்பர் 5

# தொழில் விஸ்தரிப்பு

இந்தியாவில் இன்று ஒரு மாபெரும் தொழிற் புரட்சி அபிவிருத்திபெற்று வருவதைக் காணலாம். முதல் ஐந்தாண்டு திட்டத்தின்கீழ் பொதுத் துறையில் அடிப்படைத் தொழில்கள் அபிவிருத்திக்காக ரூ. 179 கோடி ஒதுக்கப்பட்டது. தனியார் துறையில் 533 கோடி ரூபாய் செலவிடக்கூடிய ஒரு விஸ்தரிப்பு திட்டம் உருவடைந்தது. லட்சியங்கள் கைகூடி வருகின்றன. தொழில் உற்பத்தியளவு இந்திய விடுதலைக்குப்பிறகு இன்று மிக உன்னத நிலையிலிருக்கிறது. 1949 நிலைமையைக்காட்டிலும் 63% அதிகரித்துள்ளது.

சர்க்கார் ஆதரவில் நடைபெறும் அத்தியாவசியமான தொழில்களில்— அதாவது ஸிந்திரி பெர்டிலைஸர் தொழிற்சாலை, சித்தாரஞ்சன் ரயில்வே என்ஜின் தொழிற்சாலை, அபூர்வ மண் தொழிற்சாலை, இந்தியன் டெலிபோன் இண்டஸ்ட்ரிஸ், ஆலிபூரிலுள்ள புதிய தங்கசாலை, ஹிந்துஸ்தான் கேபிள்ஸ், பெரம்பூர் கோச் பாக்டரி, மெஷினகருவி உற்பத்தி—முதலிய இனங்களில் இதற்குள்ளாகவே குறிப்பிடத்தக்க வெற்றி கிடைத்துள்ளது. ரூர்கெலா, பிலாய் மற்றும் துர்க்காபூரில் மூன்று பெரிய எஃகு உற்பத்தியந்திரங்கள் நிறுவும் ஏற்பாடுகள் பூர்த்தியாகிவிட்டன. சிறு தொழில்கள் மற்றும் குடிசைத் தொழில்கள் மற்றும் கிராமியத் தொழில்களுக்கு வேண்டிய உதவி அளிக்கப்பட்டு, சமநிலை தொழில்துறையமைப்பில் அவைகளும் தகுந்த இடம்பெற வழி வகுக்கப்பட்டுள்ளது. இந்த ஆரம்ப சாதனைகளே, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ் தொழில் அபிவிருத்தி ஓங்குவதற்கு வலுவான அஸ்திவாரமாக விளங்கும்.



## மக்களின் சுபீட்சத்திற்காக மக்களின் திட்டம்

DA 55/204T39




## 36. கடிதம் வந்தது

சிறிது நேரம் சென்றது. சுப்பையா என்பவன் ஒரு தட்டிலே ஆகாரம் கொண்டு வந்து ரமணியின் முன்னால் வைத்தான். உடனே ரமணி, "எனக்கு எதுவும் வேண்டாம். எடுத்துப் போ" என்று கோபமாகக் கூறினான்.

"தம்பி, இது மாமியார் வீடு இல்லை. பிகு பண்ணாமல் சும்மா சாப்பிடு" என்று கேலியாகக் கூறிவிட்டு, சுப்பையா அந்த இடத்தை விட்டுப் பாறைமேல் இருந்த பையனிடம் சென்றான். இன்னொரு தட்டிலிருந்த ஆகாரத்தை அவனிடம் கொடுத்து விட்டுப் போய் விட்டான். அந்தப் பையன் ஐந்து நிமிஷத்தில் தட்டைக் காலி செய்து விட்டு ரமணியைப் பார்த்தான். "நீயும் சாப்பிடு" என்று சைகை மூலம் கூறினான். ஆனாலும், ரமணி சாப்பிடவில்லை. அழுதுகொண்டேயிருந்தான்.

சிறிது நேரம் சென்றது. நாலு முரடர்களும் ரமணியிருந்த இடத்துக்கு வந்தார்கள். "தம்பி, இன்னும் சாப்பிடவில்லையா? சரி, அதோ அந்த சுந்தரம் உனக்குத் துணையாக இருப்பான். பயப்படாமல் இரு. நாங்கள் வெளியில் ஒரு வேலையாகப் போகிறோம்" என்று சொல்லிவிட்டு அவர்கள் போய் விட்டார்கள்.

அவர்கள் போனதும் அந்தப் பையன் —சுந்தரம்—ரமணியின் அருகிலே வந்தான். உடனே ரமணி கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, "தம்பி, நீ யார்? இங்கு எப்படி வந்தாய்?" என்று கேட்டான்.

"என் அப்பா பெயர் தாமோதரம். ஐராவதி நதிக்கு அந்தப் பக்கம் இருக்கிறதே அமரபுரா, அங்குதான் என் வீடு இருக்கிறது. என் அப்பா ஒரு பெரிய மர வியாபாரி. அன்று ஒரு நாள் நானும் என் அப்பாவும் யானைமேல் ஏறிக்கொண்டு தேக்குமரக் காட்டுக்குப் போயிருந்தோம். இரவு நேரத்தில் அங்கிருந்த கூடாரத்தில் படுத்து நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தோம். பிறகு, என்ன நடந்தது என்று எனக்குத் தெரியாது. நான் கண்களை விழித்துப் பார்த்தபோது இங்கே இருந்தேன்! எதற்காக என்னை இங்கே கொண்டு வந்தார்கள் என்பதே தெரியவில்லை!"

"அப்படியா! உனக்கும் தெரியாதா?"

"ஆமாம், என் அப்பா மனசு வைத்தால், நான் சீக்கிரம் போய்விடலாமாம்! இதைத்தான் கேட்கிற போதெல்லாம் அவர்கள் திருப்பித் திருப்பிச் சொல்கிறார்கள். விவரமாகச் சொன்னால் தானே தெரியும்?" என்றான்.

"என்னிடம் கூட அப்படித்தான் அவர்கள் சொன்னார்கள். இவர்கள் நம்மை என்ன செய்யப் போகிறார்களோ, தெரியவில்லை!"

"போகப் போகத்தான் தெரியும். நாளையோடு நான் இங்கு வந்து சரியாக ஒரு வாரம் ஆகிறது. இதுவரை என்னை ஒன்றும் தொந்தரவு செய்யவில்லை. வேளா வேளைக்குச் சாப்பாடு தருகிறார்கள். அடிக்கடி என்னை மட்டும் இங்கே வைத்து விட்டு எல்லோரும் வெளியில் போய் விடுகிறார்கள்."

"எல்லோரும்தான் இப்போது வெளியில் போய் விட்டார்களே, நாம் மெதுவாக இங்கிருந்து தப்பி ஓடி விட்டால் என்ன?" என்று கேட்டான்.

"அதுதான் முடியாது. நான் இங்கு வந்த மறுநாளே தப்பிச் செல்ல வழியுண்டா என்று பார்த்தேன். அதோ அந்தப் பக்கம் திரும்பி ஒரு சந்து வழியாகத்தான் வெளியிலே போக வேண்டும். ஆனால், அந்தச் சந்திலே ஒரு இரும்புக் கதவு இருக்கிறது. அதை உள்ளேயிருந்தும் திறக்கலாம்; வெளியே இருந்தும் திறக்கலாம். பூட்டுவதும் அப்படித்தான். சாவி அவர்களிடமல்லவா இருக்கிறது! வா, அந்தக் கதவைக் காட்டுகிறேன்" என்று கூறி ரமணியை அழைத்துச் சென்றான் சுந்தரம். பூட்டப்பட்டிருந்த இரும்புக் கதவைக் கண்டதும் 'தொப்' பென்று அங்கேயே உட்கார்ந்துவிட்டான் ரமணி.

* * *

'ரமணியைக் காணோம்!' என்ற செய்தி மாந்தலேயில் ஒரு பெரிய



1 முதல் 31 எண்களை வரிசைக் கிரமமாகச் சேர்த்துப் பாருங்கள்.

பரபரப்பை உண்டாக்கி விட்டது. குழந்தைகள், பெரியவர்கள் எல்லோரும் அதிர்ச்சி யடைந்தார்கள். தினமும் கதை கேட்க வரும் குழந்தைகள், "ரமணி அண்ணாவைக் காணோமே! எங்கே போயிருப்பார்?" என்று கவலைப் பட்டார்கள்.

சிற்சபேசன் போலீசுக்கு இதைப் பற்றி உடனே அறிவித்திருந்தார். அவர்கள் அலை அலைசென்று அலைினர். சிற்சபேசனும் அவரது ஆட்களும் தேடாத இடம் பாக்கியில்லை. சில பெரிய குழந்தைகளும் அவர்களுடன் சேர்ந்து கவலையோடு தேட ஆரம்பித்தார்கள். மூன்று நாட்களாகத் தேடியும் ரமணி அகப்படவில்லை!

நாலாவது நாள் சிற்சபேசன் தமக்கு வந்த கடிதங்களைப் பார்த்துக் கொண்டிருந்தார். அதில் ஒரு கடிதத்தை அவர் பிரித்துச் சாவதானமாகப் படிக்க ஆரம்பித்தார். இரண்டு வரிகளைப் படித்ததும், அவர் முகம் மாறியது. பரபரப்புடன் முழுவதையும் படித்தார். படித்து முடித்ததும், "ஆ, ரமணி! உனக்கு ஆபத்தா! ஐயோ!!" என்று அலறினார்.

சத்தத்தைக் கேட்டுக் காமாட்சி அம்மாள், மாலதி இன்னும் அங்கு வந்திருந்த நாலைந்து குழந்தைகள் எல்லோரும், "என்ன, என்ன!" என்று திகிலுடன் கேட்டுக் கொண்டே அருகில் ஓடி வந்தார்கள்.

"ஐயோ, ரமணியைக் கொண்டு போய் விட்டார்களே!" என்று கதறி அழுதார் சிற்சபேசன்.

"என்ன! கொண்டு போய் விட்டார்களா? யார் கொண்டுபோனது?" என்று அங்கே இருந்த எல்லோரும் ஒரே சமயத்தில் பரபரப்போடு கேட்டார்கள்.

"பண ஆசை பிடித்த சில அயோக்கியர்கள்தான் இந்த வேலையைச் செய்திருக்கிறார்கள். ரூபாய் பத்தாயிரம் கொடுத்தால்தான் ரமணியைத் திருப்பித் தருவார்களாம்!......"

"அப்படியா! ஐயோ! ரமணியை அவர்கள் இந்நேரம் என்ன பாடு படுத்துகிறார்களோ!... பத்தாயிரத்தைக் கொடுத்தால், உடனே திருப்பித் தந்து விடுவார்களா? நிஜமாகவா?" என்று கேட்டாள் காமாட்சி அம்மாள்.

"அப்பா, அப்பா, எப்படியாவது ரமணி அண்ணாவைக் கூட்டி வந்து விடு, அப்பா. அண்ணா இல்லாமல் எனக்கு எவ்வளவோ கஷ்டமாயிருக்கிறது!" என்றாள் மாலதி.

அப்போது அங்கிருந்த அடுத்த வீட்டுப் பர்மியப் பையன்—அவன் பெயர் மவுங் லா அவுங், "ஆமாம், இப்போது ரமணியை எங்கே வைத்திருக்கிறார்களாம்? நாம் யாரிடத்திலே பணத்தைக் கொடுக்க வேண்டுமாம்?" என்று அவர்களிடம் கேட்டான்.

"எந்த இடத்தில் ரமணியை வைத்திருக்கிறார்கள் என்பதை எழுதவில்லை.

# வீட்டுச் சலவை வேலையை

## சுலபமாக்குகின்றன



501 ஸோப்புகளின் செழுமையான நுரை துணி மணிகளுக்குள் ஊடுருவிச் சென்று, அழுக்கை யெல்லாம் மாயமாய் வெளியேற்றுகிறது. இந்த ஸோப்புகள் வீட்டுச் சலவை வேலையை உங்களுக்கு அதிக சுலபமும் சிக்கனமுமாக்குகின்றன.




# 501

## சலவை ஸோப்புகள்

டாடா தயாரிப்பு




இந்திய மூலதனத்தைக் கொண்டு, இந்திய நிர்வாகத்தில், இந்தியாவிலேயே தயாரிக்கப்படுவது

Fs 8707

ஆனால், பணத்தை எந்த இடத்தில் கொண்டுபோய் வைக்க வேண்டும் என்பதை மட்டும் எழுதியிருக்கிறார்கள். இந்தப் பங்களாவுக்குத் தெற்கே ஐந்து மைல் தூரத்தில் ஒரு மலை இருக்கிறதே, அந்த மலையின் வடக்கு ஓரத்தில் ஒரு பெரிய ஆலமரம் இருக்கிறதாம். அந்த ஆலமரத்தின் பின்புறத்திலே ஒரு பொந்து இருக்கிறதாம். ஒரு சிறிய பெட்டியில் ரூபாய் பத்தாயிரத்தை வைத்து அந்தப் பெட்டியை நானாவது அல்லது நம் ஆளாவது கொண்டு போய் அந்தப் பொந்திலே யாருக்கும் தெரியாமல் வைத்துவிட்டுத் திரும்பிப் பார்க்காமலே வந்துவிட வேண்டுமாம். நாம் வைக்கும் பெட்டியை அந்த அயோக்கியர்கள் எப்படியாவது எடுத்துக்கொள்வார்களாம். எடுத்துக் கொண்டதும் ரமணியைக் கொண்டு வந்து ஊருக்குள் விட்டு விடுவார்களாம்.''

'' அப்படியானால், நாம் ஒரு வேலை செய்யலாம். அந்தப் பொந்துக்குள் நாம் பணத்தை வைத்திருக்கிறோமா என்று பார்ப்பதற்கு அவர்கள் அடிக்கடி வருவார்கள் போல் தெரிகிறது. ஆகையால், நாம் உடனே போலீஸாருக்குத் தகவல் கொடுத்து, ஆலமரத்துக்கு வரும்போது அவர்களைப் பிடிப்பதற்கு ஏற்பாடு செய்தால் என்ன?'' என்று கேட்டான் மவும்.

அதற்குச் சிற்சபேசன், '' தம்பி, அதெல்லாம் ஆபத்து! அவர்களுடைய ஆட்கள் உளவு பார்த்துக் கொண்டேயிருக்கிறார்களாம். போலீஸில் தகவல் கொடுத்தால், அவர்கள் எப்படியாவது தெரிந்து கொண்டு விடுவார்களாம். அப்புறம், ரமணியை நாம் உயிரோடு பார்க்கவே முடியாதாம்! நமக்கும் ஆபத்துத்தானும்! இதையெல்லாம் இதோ இந்தக் கடிதத்தில் எழுதியிருக்கிறார்களே!'' என்றார் கவலையுடன்.

சிறிது நேரம் எல்லோரும் பேசாமல் இருந்தார்கள். பிறகு காமாட்சி அம்மாள், '' பாவம், ரமணி இப்போது எப்படியெல்லாம் கஷ்டப்படுகிறானோ! ரூபாயைப் பார்த்தால் முடியுமா? உடனே பணத்தை அனுப்பி ரமணியைத் திரும்பிப் பெறுவதற்கு வழி செய்யுங்கள்'' என்றாள்.

'' ஆமாப்பா. ரமணி அண்ணாவைச் சீக்கிரம் கூட்டி வாப்பா '' என்று கூறினாள் மாலதி.

சிற்சபேசன் சிறிது நேரம் யோசனை செய்தார். பிறகு, '' பத்தாயிரத்தைப் பற்றிக் கவலையில்லை. ரமணி கிடைத்தால் போதும். ஆனால் ரமணி அவர்களிடம் தான் இருக்கிறான் என்பது என்ன நிச்சயம்? ரமணியைக் காணோம் என்று நாமெல்லோரும் வருத்தப்படுகிறோமே, இதைத் தெரிந்து கொண்டு நம்மை ஏமாற்றிப் பணம் பிடுங்க எவனாவது இப்படி எழுதி யிருந்தால்...?'' என்று எண்ணினார். அதன்பிறகு, '' ஆமாம், அப்படியும் இருக்கலாம். எதற்கும் நாமும் ஒரு பதில் கடிதம் எழுதி ஆலமரப் பொந்திலே வைத்து விட்டு வர ஏற்பாடு செய்வோம்'' என்று ஒரு முடிவுக்கு வந்தார்.

உடனே ஒரு காகிதத்தை எடுத்து, அதில் அவசரம் அவசரமாக எழுத ஆரம்பித்தார்.

'' நான் பணம் தரத் தயார். ஆனால், ரமணி உங்களிடம்தான் இருக்கிறான் என்பது எங்களுக்குத் தெரிய வேண்டாமா? ஆகையால், ரமணி கைப்பட ஒரு கடிதம் எழுதி எனக்கு அனுப்பி வைத்தால் மறு நிமிஷமே பணம் கிடைக்கும்'' என்று எழுதி, ஒரு சிறு பெட்டியில் அந்தக் கடிதத்தை வைத்தார். பிறகு ஒரு வேலைக்காரனிடம் பெட்டியைக் கொடுத்து ஆலமரப் பொந்தில் வைத்து விட்டு வரச் சொன்னார். (தொடரும்)



# யமனும் சிப்பாயும்



[சென்ற வாரத் தொடர்ச்சி]

சிப்பாய் செய்த எச்சரிக்கையைக் கேட்டுப் பிசாசுகள் நடுங்கின. 'உங்கள் வழிக்கே வரவில்லை' என்று கூறிவிட்டுக் கண் இமைக்கும் நேரத்துக்குள் அந்த இடத்தை விட்டுப் போய் விட்டன.

அடுத்தாற் போல் சிப்பாய் அங்கிருந்த குருமார்களிடம் விடை பெற்றுக் கொண்டான். நேரே வியாபாரியின் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தான்.

வியாபாரியைப் பார்த்ததுமே சிப்பாய், "ஐயா, இனிமேல் உம்முடைய புது வீட்டுக்குப் பயமில்லாமல் போய்க் குடியேறலாம். எந்தப் பேயும் பிசாசும் உம்மைத் தொந்தரவு செய்யாது" என்றான்.

வியாபாரியினால் சிப்பாயின் வார்த்தைகளை நம்பவே முடியவில்லை. அவனுக் கேற்பட்ட ஆச்சரியத்தில் சிப்பாயைப் பார்த்தபடியே சற்று நேரம் திகைத்து நின்று விட்டான். சுய உணர்வு பெற்றதும் "உண்மையிலேயே ருஷ்யச் சிப்பாயை நெருப்பும் நீரும் ஒன்றும் பண்ண முடியாதுதான்!" என்றான்.

சிப்பாய் எப்படி இந்தப் பிசாசுகளை விரட்டினான் என்று தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் வியாபாரியின் உள்ளத்தில் பொங்கியது. அந்த ஆவலில் "நீ எப்படிப் பிசாசுகளை விரட்டினாய்! எனக்கு அந்த விவரங்களை யெல்லாம் சொல்லேன்!" என்று கேட்டான்.

சிப்பாய் நடந்தவை யெல்லாம் ஒன்று விடாமல் சொன்னான். அவன் சொல்லச் சொல்ல வியாபாரிக்கு 'இப்படியும் நடக்குமா!' என்று நம்ப முடியாத ஆச்சரியம் ஏற்பட்டது. ஆனால் கூட இருந்த கடைச் சிப்பந்திகள் சிப்பாய் கூறியவை யெல்லாம் உண்மை யென்று ஆமோதித்தனர்.

இருந்தாலும் வியாபாரியின் பிசாசு பயம் நீங்கவில்லை. அந்த வீட்டுக்குக் குடியேறத் தயங்கினான். பிசாசுகள் மீண்டும் வந்து தொந்தரவு செய்யாது என்று நிச்சயப் படுத்திக் கொண்ட பின்தான் அங்கு குடியேற வேண்டும் என்று தீர்மானித்தான். அதற்கேற்ப, சிப்பாயை அழைத்துக் கொண்டு வந்த கடைச் சிப்பந்திகளையே பங்களாவில் அன்றிரவு தங்கும்படி சொன்னான். அவர்கள் இப்போது பயந்தார்கள். வியாபாரி அவர்களுக்குத் தைரியமூட்டும்வகையில் "உங்களுடன் சிப்பாயையும் அனுப்புகிறேன். ஏதாவது நேர்ந்தால், சிப்பாய் பார்த்துக்கொள்வான்" என்று கூறினான்.

பிறகுதான் அவர்கள் புறப்பட்டுச் சென்றார்கள். அன்றிரவு ஒன்றும் நேரவில்லை. நிம்மதியாகத் தூங்கினார்கள். மறுநாள் காலை எப்பொழுதும் போல் சிரித்துப் பேசிக் கொண்டு வந்தார்கள். இப்படி இரண்டு நாட்கள் கழிந்தன.

மூன்றாவது நாள் இரவு வியாபாரியே அவர்களுடன் படுக்கத் துணிந்தான். அமைதியாக இரவு கழிந்தது. இப்பொழுது, அந்த வீட்டில் குடியேறலாம் என்று வியாபாரி தீர்மானித்தான்.

பணக்கார வியாபாரி தன் புது வீட்டுக்குக் குடி போகிறான் என்றால் சாதாரண விஷயமா! அது ஒரு பெரிய திருவிழாவாகவே நடக்கத் தீர்மானித்தான். விருந்துக்குப் பிரமாத ஏற்பாடுகள் செய்திருந்தான். ஏராளமான நண்பர்களை வரவேற்றான். சாப்பாடும் கூத்தும் அமர்க்களப் பட்டன. சிப்பாய்க்கு ஏக உபசாரம். "சிப்பாய்! நீ எனக்குப் பேருபகாரம் செய்திருக்கிறாய். அந்த உபகாரத்தை என் உயிருள்ள வரை மறக்க மாட்டேன்" என்றெல்லாம் கூறி உபசரித்தான்.

இப்படி கிரகப்பிரவேச வைபவத்தின் கேளிக்கைகள் விடிய விடிய நடைபெற்றன! ஆம், வந்திருந்த விருந்தினர்கள் விடியற்காலையில் தான் போனார்கள். வீட்டில் இருந்தவர்களும் அதற்கப்புறம்தான் தூங்கப் போனார்கள்.

அவர்கள் தூங்கி விழித்தபோது, சிப்பாய் புறப்படுவதற்கு ஆயத்தம் செய்து கொண்டிருப்பதைப் பார்த்தார்கள். வியாபாரி ஓடோடி வந்து, "சிப்பாய், என்ன அவசரம் வந்தது! இன்னும் கொஞ்ச நாட்கள் என்னோடுதான் இரேன். குறைந்த பட்சம் ஒரு வாரமாவது இருந்துவிட்டுப் போகக்கூடாதா!" என்று கெஞ்சாத குறையாகக் கேட்டான். இன்னும் என்னவெல்லாமோ சொல்லி வற்புறுத்தினான். சிப்பாய் கேட்பதாக இல்லை.

"இல்லை, என்னை மன்னித்து விடுங்கள். ஏற்கனவே நான் ரொம்ப நாட்கள் தங்கி விட்டேன். எனக்கு வீட்டுக்குப் போய்ச் சேர வேண்டும் போலிருக்கிறது!" என்றான்.



மொழி பெயர்ப்பு

எஸ். வி. எஸ்

பிறகு வியாபாரி அவன் பை நிறையப் பொற்காசுகளை நிரப்பி, "இனிமேல் நீ வாழ்வில் ஒரு கவலையும் படக்கூடாது. அதற்குத்தான் இந்தப் பொன்" என்றான்.

சிப்பாய், "இந்தப் பொற்காசுகள் எனக்கு எதற்கு! நான் ஒரு ஒற்றைக் கட்டை. தனி மனிதன். மேலும், என் உடம்பில் பலமிருக்கிறது; உள்ளத்தில் தெம்பிருக்கிறது. என் சாப்பாட்டுக்கு வேண்டியதைச் சம்பாதித்துக் கொள்வதில் என்ன கஷ்ட மிருக்கிறது!" என்று கூறித் திருப்பிக் கொடுத்து விட்டான்.

பிறகு தன் பையில் மந்திரப் பெட்டியைப் போட்டுக் கொண்டு புறப்பட்டுப் போனான்.

அவன் எவ்வளவு தூரம் நடந்தான், எங்கெல்லாம் நடந்தான் என்றெல்லாம் நம்மால் சொல்ல முடியாது. எப்படியோ பல நாட்கள் நடந்து ஒரு நாள் ஒரு மலைச் சரிவை யடைந்தான். அந்த மலைச் சரிவில் நின்று பார்த்தான். அவன் கிராமம் பளிச் என்று கண்ணில் பட்டது. அந்த க்ஷணம் அவன் உள்ளத்தில் பொங்கிய இன்ப வெள்ளத்தை என்னென்பது! தன் கிராமத்தை ஒரு முறை அங்கிருந்தபடியே சுற்றிப் பார்த்தான். 'ஆகா! எவ்வளவு அழகாக இருக்கிறது! நானும்தான் எத்தனையோ நாடுகளை, எத்தனையோ ஊர்களைப் பார்த்திருக்கிறேன். ஒன்றிலாவது என் கிராமத்தின் அழகுண்டா, இன்பமுண்டா! பிறந்த ஊருக்கு இணையாகச் சொல்லக்கூடிய இடம் உலகிலேயே கிடையாது!' என்று நினைத்தான். இப்படி நினைக்க நினைக்க அவன் நடை துரிதப்பட்டது. நேரே தன் வீட்டை யடைந்தான்.

வீட்டுக் கதவைத் தட்டினான். ஒரு தொண்டு கிழவி கதவைத் திறந்தாள். கிழவிதான் அவன் தாயார். சிப்பாய் தன் தாயாரை ருஷ்ய நாட்டு வழக்கப்படி



கட்டி அணைத்துக் கொண்டு தன் மனமார்ந்த வணக்கங்களைச் செலுத்தினான்.

கிழவிக்கு அவன் யார் என்று புரிந்து கொள்ளச் சற்று நேரம் ஆயிற்று. தன் மகன் என்று தெரிந்ததும் அவளுக்குண்டான சந்தோஷம் கொஞ்ச நஞ்சமல்ல! அந்தச் சந்தோஷத்தில் கிழவிக்குச் சிரிப்பும் அழுகையும் மாறி மாறி வந்தன. ஆம், அவள் கண்கள் ஆனந்தபாஷ்பத்தைச் சொரிந்தன. அப்படியே அவள், சிப்பாயைப் பார்த்து, "அப்பா, குழந்தாய்! கிழவர்—(சிப்பாயின் தந்தையைக் குறிக்கிறாள்) தன் கடைசி மூச்சு போகிறவரைக்கும் உன்னையே நினைத்துக் கொண்டிருந்தார். அவர் உன்னை நினைக்காத நாளே கிடையாது. அவர் மட்டும் இன்று உயிரோடிருந்தாரானால் எவ்வளவு சந்தோஷப்பட்டிருப்பார், தெரியுமா! ஆனால் அவர் போய் ஐந்து வருஷங்களுக்கு மேலாகி விட்டன!" என்றாள்.

இப்படி எத்தனை நாழிகை வருத்தப்பட்டுக் கொண்டிருக்க முடியும்! கிழவி வீட்டு வேலைகளைச் செய்யக் கிளம்பினாள். அப்போது சிப்பாய் தாயைத் தடுத்து, "அம்மா, இனிமேல் நீ இந்தமாதிரி யெல்லாம் வேலை செய்யக் கூடாது. நீ நிம்மதியாக இருக்க வேண்டும். உன் சௌக்கியத்தையும் தேவைகளையும் பார்த்துக் கொள்ள வேண்டியது என் பொறுப்பு" என்று சொல்லி விட்டுத் தன் பையிலிருந்த மந்திரப் பெட்டியை எடுத்தான். அதைக் கையில் வைத்துக் கொண்டு அறுசுவையுடன் கூடிய விருந்துச் சாப்பாடு வேண்டும் என்றுநினைத்துக்கொண்டு பெட்டியைக் குலுக்கினான். பிறகு திறந்துபார்த்தான். அதில் எல்லாம் இருந்தன. ஒவ்வொன்றாக எடுத்து மேஜையின் மேல் வைத்தான். "அம்மா, உனக்கு இஷ்டமானதைச் சாப்பிடு" என்றான்.



மறுநாள் 'எனக்கு நிறைய வெள்ளிப் பணம் வேண்டும்' என்று மனசில் விரும்பிக் கொண்டு பெட்டியைத் திறந்தான். நிறையப் பணம் இருந்தது. அந்தப் பணத்தைக் கொண்டு அழகான வீடு கட்டினான். வீட்டுக்கு ஏற்ற ஒரு பசுவையும் குதிரையையும் வாங்கினான். ஏன், குடும்ப நிர்வாகத்துக்கு வேண்டிய பொருள்கள் எல்லாம் வாங்கினான். இவ்வளவும் வாங்கிய பிறகு இல்லத்துக்கு ஒரு அழகிய இல்லாள் வேண்டாமா! சிப்பாய் ஒரு பெண்ணைக் காதலித்துக் கலியாணமும் செய்து கொண்டான். இப்படி அவன் குடும்பம் நடத்தத் தொடங்கினான்.

சிப்பாய் உடலுழைத்து வேலை செய்து வாழ்வதில் நம்பிக்கையுடையவனாதலால் தினம் வயலுக்குச் சென்று பாடுபட்டு உழைத்து, வாழ ஆரம்பித்தான்.

சிறிது நாட்களில் சிப்பாய்க்குக் குழந்தைகள் பிறந்தன. அந்தப் பேரன் பேத்திமார்களை எடுத்து வைத்துக் கொஞ்சிக் குலாவுவதில் தன் பொழுதைக் கழித்தாள் கிழவி. தன் மகனுக்கு இத்தனை வயதுக் கப்புறம் ஏற்பட்டுள்ள பாக்கியங்களை நினைத்து நினைத்துப் பூரித்துப் போனாள் அவன் தாயார்.

* * *

ஆறு ஏழு ஆண்டுகள் கழிந்தன. ஒரு நாள் சிப்பாய்க்குச் சுரம் கண்டது. படுக்கையில் படுத்தவன் மூன்று நாட்கள் மூடிய கண்களைத் திறக்காமலும், அன்ன ஆகாரமின்றியும் படுத்த படுக்கையாகக் கிடந்தான். நான்காவது நாள் கண்ணை மெல்லத் திறந்தான். பார்த்தால் தன் படுக்கைக்குப் பக்கத்தில் யமன் உட்கார்ந்து கொண்டு கத்தியைத் தீட்டிக் கொண்டிருந்தான். கூடவே தன்னையும் அடிக்கடி கவனித்துக்கொண்டிருப்பதைப் பார்த்தான்.

சிப்பாய்க்கு விஷயம் புரிந்து விட்டது. போதாததற்கு யமனே, "வா ஐயா, சிப்பாய்! உன்னை அழைத்துக் கொண்டு போகலாம் என்றுதான் வந்திருக்கிறேன்" என்றான்.

சிப்பாய், "உன்னோடு வருவதற்கு இப்பொழுது என்ன அவசரம் வந்திருக்கிறது! நான் இன்னும் இந்த உலகில் முப்பது வருஷங்கள் இருந்து விட்டுத்தான் வரப் போகிறேன். ஆம்! என் குழந்தைகளை யெல்லாம் வளர்த்து, அவர்களைப் பெரியவர்களாக்கி, கல்யாணம் கார்த்திகை செய்து, பேரன் பேத்தி எடுத்து, கொஞ்ச நாள் கொஞ்சிக் குலாவியான பிறகு வா, வருகிறேன். நிச்சயமாக வருகிறேன். இப்போது என்னால் முடியாது. ஆமாம், இப்போது என்னால் சாக முடியாது!" என்றான்.

"அதெல்லாம் நடக்காது, இப்பொழுதே வர வேண்டும். மூன்று மணி நேரம் கூட உனக்கு அவகாசம் கொடுக்க முடியாது!" என்று சொன்னான் யமன்.

"சரி, உன்னால் முப்பது வருஷ வாழ்வு எனக்குக் கொடுக்க முடியாது என்றால் மூன்று வருஷமாவது கொடு. எவ்வளவோ வேலை பாக்கி கிடக்கிறது. அவற்றையாவது முடித்துக்கொண்டு வருகிறேன்" என்றான் சிப்பாய்.

யமனுக்குக் கோபம் வந்து விட்டது. "உனக்கு மூன்று நிமிஷங்கூடத் தர முடியாது" என்றான் மிகக் கண்டிப்பான குரலில்.

இப்பொழுது சிப்பாய் பார்த்தான். இந்த யமனிடம் கெஞ்சுவதில் பிரயோசனமில்லை என்பதை அறிந்து கொண்டான். தனக்கோ சாக விருப்பமில்லை; யமனோ விடமாட்டான் போலிருக்கிறது. இந்த நிலையில் என்ன செய்வது! மெல்லத் தன் தலையணைக்கு அடியிலிருந்த

# தண்ணீர் பம்புகளில் மிக நவீனமானது

இந்த புத்தம் புதிய மயர்ஸ் எஜக்டோ பம்பில் எவ்விதமான அசையும் பாகங்கள் இல்லை. அதற்கு லூப்ரிகேஷன் அவசியமில்லை. வெகு சிக்கனமாக இயங்கச் செய்யலாம். அதிக அழுத்தும் சக்தியினால் தாராளமான தண்ணீர் சப்ளை கிடைக்கும். உங்களது முதலீட்டை மயர்ஸ் எஜக்டோ பம்பிலேயே செய்யுங்கள். 'வி' பெல்ட் பூட்டிய ரகத்திலும், நேரிடையாக இணைத்து இயங்கும் ரகத்திலும் கிடைக்கும்.



**MYERS EJECTO PUMPS**

வாட்டர் சப்ளை
ஸ்பெஷலிஸ்ட்ஸ் லிட்.
45, தம்பு செட்டித் தெரு, சென்னை-1

## அரித்து, எரிந்து, கொப்பளிக்கும் எக்ஸிமா 10 நிமிஷத்தில் குணமடைகிறது

நிக்ஸோடெர்ம் (Nixoderm) கண்டு பிடித்தது முதல் யாரும் எக்ஸிமா, பரு, ரத்தக் கட்டி ஆகிய சரும வியாதிகளால் அவதியுறவும், உங்களுக்கும் பிறருக்கும் வெறுப்பு ஏற்படவும் வேண்டாம். ரஸாயன முறையில் தயாரித்த நிக்ஸோடெர்ம் (Nixoderm) உதவியால் சருமத்தை சுத்தமாக்குங்கள். அனாவசியமாக வைத்துக் கொண்டு பிறர் உங்களை வியாதியஸ்தரெனக் கருத இடம் தாரீர்.

### ஒரு புதிய சாதனம்

நிக்ஸோடெர்ம் (Nixoderm) ஒரு புதிய களிம்பு. ஆனால் நீங்கள் உபயோகித்த இதர களிம்பைப் போன்றதல்ல. பிசுக்கற்றது. மேலே தடவும் போதே ஒரு பவுடரைப்போல உணருவீர்கள். சருமத் துவாரங்களினூடே சென்று வியாதிக்கு மூலமான இடத்தை தாக்குகிறது. நிக்ஸோடெர்ம் (Nixoderm) மூன்று வழிகளில் உபாதையைத் தாக்குகிறது: (1) நோய்க்குக் காரணமாகும் கிருமிகளைக் கொல்லுகிறது. (2) அரிந்து, எரிந்து வெந்து போவதை 7 முதல் 10 நிமிஷத்தில் தடுத்து சருமத்தை மென்மையாக்குகிறது. (3) இயற்கையாகவே ஆற்றி, சுத்தமாக மிருதுவாகப் பட்டுப் போல வழவழுப்பாகவும் ஆக்குகிறது.

### விரைவில் பலனளிக்கிறது

சரும நோய்களை நிவர்த்திக்கவே விஞ்ஞான முறையில் தயாரான நிக்ஸோடெர்ம் (Nixoderm) மற்றதைவிட சீக்கிரம் வேலை செய்கிறது. நமைச்சல், எரிச்சலை சில நிமிஷத்தில் நிறுத்தி விரைவில் சருமத்தை சுத்தமாக ஆற்றி, மிருதுவாகவும் வழவழுப்பாகவும் செய்கிறது. ஓரிரண்டு தினங்களில் கண்ணாடியில் பார்த்துக் கொள்ளுங்கள். தேடிய சஞ்சீவி - நாடிய வைத்தியம் கிடைத்ததை உணர்வீர்கள். நிக்ஸோடெர்ம் (Nixoderm) ஆயிரக் கணக்கானவர்களது சருமத்தைச் சுத்தமாக்கி




புஷ்டியாக்கியது. அவர்களில் ஒருவரான மிஸ்டர் R. K. கூறுகிறார். "12 வருஷமாக நமைச்சலும் எரிச்சலும் தரும் எக்ஸிமாவினால் கஷ்டப்பட்டேன். பல மருந்துகளுக்கும் பிறகு நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகித்தேன். 10 நிமிஷத்தில் நமைச்சல் நின்று மறுநாளே சருமம் சுத்தமாகியது. என் தோற்றத்தின் மாறுதலைக் கண்ட நண்பர்கள் ஆச்சரியமடைந்தனர்.

### திருப்திக்கு உத்தரவாதம்

சருமம் திருப்தியாகாதவரை நிக்ஸோடெர்ம் (Nixoderm) மதிப்பை இழக்கிறது. இன்றே நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். தோற்றத்தில் ஏற்படும் அபிவிருத்தியைக் காண ஆச்சரியப் படுவீர்கள். ஒரு வாரத்துக்கு உபயோகித்தால் சருமம் வழவழுப்பாயும் மிருதுவாயும் சுத்தமாயும் வசீகரமாகவும் ஆவது நிச்சயம். இல்லையேல் காலிப் பெட்டியைத் திருப்பிக் கொடுத்து, கொடுத்த விலையை வாபஸ் பெறுங்கள். இன்றே நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். அதற்களித்த உத்தரவாதமே உங்களுக்கான உறுதி.

மந்திரப் பெட்டியை எடுத்தான். "உள்ளே போ!" என்று கத்திக்கொண்டு ஒரு ஆட்டு ஆட்டினான். அவ்வளவுதான்! யமன் பெட்டிக்குள் சிறைப்பட்டான்! சிப்பாய்க்குச் சந்தேகம், யமன் பெட்டிக்குள் போனானோ இல்லையோ என்று. அதனால் ஒரு முறை இலேசாகத் திறந்து பார்த்தான். யமன் பெட்டிக்குள் உட்கார்ந்திருந்தான். உடனே 'டப்' பென்று அதை மூடி விட்டான்.

இனி சிப்பாயின் உடம்பு தேறி வரத் தொடங்கியது. மூன்று நாட்களாக இல்லாத பசி, இப்பொழுது எங்கிருந்தோ வந்தது. தானே படுக்கையை விட்டு எழுந்திருந்து ரொட்டியைத் துண்டு துண்டாக்கி உப்பைத் தொட்டுக் கொண்டு சாப்பிட்டான். அப்புறம் ஒரு பானத்தைச் சாப்பிட்டான்.



அவ்வளவுதான்; சிப்பாய் பழைய மாதிரி ஆகி விட்டான். பழைய தெம்பு வந்து விட்டால் சும்மா இருக்கத் தோன்றுகிறதா! மந்திரப் பெட்டியின் அருகில் போனான். "மூக்கறுபட்ட யமனே, நான் சொன்னபடி கேட்க முடியாது என்றாயே! அதன் பலன் பார்த்தாயா! இப்பொழுதாகிலும் தெரிந்து கொள். ருஷ்யச் சிப்பாயிடம் எல்லோருடன் நடந்து கொள்வது போல் நடந்து கொள்ளக் கூடாது என்று!"

பெட்டிக்குள்ளிருந்த யமன் குரல் கொடுத்தான்: "ஐயா, சிப்பாய்! என்னை என்ன செய்யப் போகிறாய்!"

"என்ன செய்வது என்று தெரியாமல்தான் விழிக்கிறேன். உன்னை இந்த மந்திரப் பெட்டிக்குள் அடைத்ததில் இந்தப் பெட்டியை வேறு எதற்கும் உபயோகிக்க முடியாமல் போய் விட்டது. அதற்காக வேண்டி உன்னை வெளியில் விடுவதாகவும் இல்லை. உன்னை இந்தப் பெட்டியோடு சேற்றுக் குட்டையில் போட்டுவிடப் போகிறேன். நீ உயிரோடிருக்கும் வரை நீ அந்தப் பெட்டியிலிருந்து வெளியே தப்பி வர முடியாது" என்றான் சிப்பாய்.

"ஐயோ, அப்படியெல்லாம் செய்யாதே! உனக்கு மூன்று வருஷ ஆயுசு கொடுக்கிறேன். என்னைத் தயவுசெய்து வெளியே விட்டு விடு" என்றான் யமன்.

"ஒருநாளும் முடியாது. உன்னை வெளியே விடப் போவதே இல்லை."

"நீ கேட்டபடி முப்பது வருஷ ஆயுசு தருகிறேன். என்னை வெளியே விட்டுவிடேன்" என்று யமன் கெஞ்சினான்.

"அப்படி வா வழிக்கு. ஆனால் ஒரு நிபந்தனை. 'இந்த முப்பதாண்டுகளில் உலகில் யாருடைய உயிரையும் பறிக்க மாட்டேன்' என்று வாக்குக் கொடுக்க வேண்டும்."

"இந்த மாதிரி எப்படி வாக்குக் கொடுக்க முடியும்! நான் உயிர் வாழ வேண்டாமா! பிற உயிரைப் பறித்தால் அல்லவா நான் உயிர் வாழ முடியும்" என்றான் யமன்.

"ஏன், கல், மண், மரம், மட்டை, கிழங்கு இப்படி ஏதாகிலும் சாப்பிட்டுக் கொண்டு தான் இரேன்!" என்றான் சிப்பாய்.

இதற்கு யமன் பதில் சொல்லவில்லை. சிப்பாய் தன் ஆடைகளை அணிந்து காலில் பூட்ஸை மாட்டிக் கொண்டு வெளியே புறப்பட்டான். புறப்படுவதற்கு முன், பெட்டியின் அருகில் போய், "என் நிபந்தனைக்கு நீ உட்படாததால் உன்னைச் சேற்றுக் குட்டையில் எறிந்துவிடப் போகிறேன்" என்று கூறி விட்டுப் பெட்டியைக் கையில் எடுத்துக் கொண்டான்.

நிலைமை இவ்வளவுக்கு மோசமாகி விட்டது. யமன் என்ன செய்வான்!

"சரி, உன் விருப்பப்படியே முப்பது ஆண்டுகளுக்கு யாருடைய உயிரையும் வாங்காமல் மரம், மண், பட்டை, கிழங்கு ஆகியவற்றைத் தின்று கொண்டு வாழப் பார்க்கிறேன்" என்றான் யமன்.

"இப்படியெல்லாம் இப்பொழுது சொல்லி விட்டு, அப்புறம் ஏமாற்றி விடக் கூடாது!" என்று எச்சரிக்கை செய்தான் சிப்பாய்.

*

பிறகு யமனை ஊருக்கு வெளியே கொண்டு போய்ப் பெட்டியைத் திறந்து, "என் மனசு மாறி, மீண்டும் உன்னைச் சிறைப்பிடிக்க வேண்டும் என்று தோன்றிவிடப் போகிறது. அதற்குள் என் கண் பார்வையை விட்டே ஓடிவிடு!" என்றான். யமனும் தன் அரிவாளை எடுத்துக் கொண்டு காட்டுக்குள் ஓடி மறைந்து விட்டான். காட்டில் மரப் பட்டைகளையும் கிழங்குகளையும் வேர்களையும் சாப்பிட்டுக் கொண்டு காலம் கழித்தான்.

ஊரிலோ ஜனங்கள் யம பயம் நீங்கிச் சந்தோஷமாக வாழ்ந்தார்கள். ஒருவருக்கு ஒரு நோய் நொடி வந்தது என்பது கிடையாது. ஒருவர் கூட இறக்கவில்லை.

இப்படி முப்பது ஆண்டுகள் கழிந்தன.

இந்த முப்பது வருஷங்களில் சிப்பாயின் குழந்தைகள் எல்லாம் பெரியவர்களானார்கள். பெண்களுக்கும் பிள்ளைகளுக்கும் கல்யாணம் பண்ணி வைத்தான். அவர்கள் குடும்பங்களில் ஏற்படும் தகராறுகளையெல்லாம் தீர்த்துவைத்தான். சிலருக்குப் பணத்தால் உதவ வேண்டியிருந்தால், பணங் கொடுத்து உதவினான். சிலருக்கு யோசனை கூறி உதவ வேண்டியிருந்தால், யோசனைகள் கூறி உதவினான். இப்படி ஒவ்வொருவருக்கும் ஏதோ ஒரு உதவி செய்து கொண்டிருந்தான். இதற்கே சிப்பாயின் நேரம் சரியாக இருந்தது. சாவைப் பற்றி நினைக்கவே அவனுக்கு அவகாசம் கிடைக்கவில்லை!

ஒருநாள் திடீர் என்று சிப்பாயின் முன்பு ஒரு நீண்ட உருவம் தோன்றியது. சிப்பாயின் வாழ்வு எவ்வளவு நீளமோ, அவ்வளவு நீளத்துக்கு உருவ மெடுத்துக் கொண்டு வந்திருந்தான் யமன்.

"சிப்பாய், இன்றோடு உன் முப்பதாண்டுகள் முடிந்தன. உன் காலவரை முடிந்து விட்டது. இன்று உன்னை அழைத்துப் போக வந்திருக்கிறேன்" என்றான் யமன்.

இவனோடு இந்தத் தடவை வாதாடுவதில் பிரயோசனமில்லை, வேறு உபாயம் கண்டு பிடித்துத்தான் தப்ப வேண்டும் என்று தீர்மானித்து, "யமனே, என்னை யார் என்று நினைத்துக் கொண்டாய்! ராணுவத்தில் உழைத்த சிப்பாய். போர்வீரன். ராணுவத்தில் அழைப்புக் குரல் வந்தவுடன் சிப்பாயானவன் அந்தக்கணமே புறப்படத் தயாராகி விட வேண்டும். அப்படிப் பழக்கப் பட்டவன். இதோ உன் அழைப்புக் குரல் வந்து விட்டது. உன்னோடு போக வேண்டிய காலம் வந்து விட்டது. நான் தயார். சவப் பெட்டியைக் கொண்டு வா. நான் வருகிறேன்" என்றான்.

யமனுக்குச் சிப்பாயின் வார்த்தைகளில் பரிபூரண நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. நல்ல இரும்புக் கொக்கிகள் போட்ட சவப் பெட்டியைக் கொண்டு வந்து சிப்பாயின் முன்னர் வைத்தான். பிறகு மேல் மூடியைத் திறந்து, "சிப்பாயே, உள்ளே போ!" என்றான்.

இதைக் கேட்டவுன் சிப்பாய்க்குக் கோபம் வந்து விட்டது. "யமனே, உனக்கு ஒரு காரியமும் சரியாகச் செய்யத் தெரியாது போலிருக்கிறது. நீ வேண்டுமானால் அப்படியிருக்கலாம். ராணுவச் சிப்பாய் அப்படி எந்தக் காரியத்தையும் அரையும் குறையுமாகச் செய்ய முடியாது. எடுத்த காரியம் எதையும் ஒழுங்காகச் செய்ய வேண்டும். அதற்காக ராணுவத்தில் எப்படிப் பழக்குவார்கள் தெரியுமா! முதலில் சேனைத் தலைவரே ஒரு சிப்பாய் செய்ய வேண்டிய காரியத்தை முன் மாதிரியாகச் செய்து காண்பிப்பார். அதைப் பார்த்துக் கொண்டு, பிறகு சிப்பாய் கட்டளைப் படி அதேமாதிரி செய்வான். யமனே, நீயும் அந்த வழியைத்தான் பின்பற்ற வேண்டும். நான் என்ன செய்ய வேண்டும் என்பதை முதலில் நீ செய்து காட்ட வேண்டும். பிறகு எனக்குக் கட்டளையிடு. நான் அதேமாதிரி செய்கிறேன்!" என்றான்.

இதைக் கேட்டு யமன் பெட்டிக்குள் நுழைந்தான். "பார், சிப்பாய்! இப்படித்தான் கால்களை நீட்டி, கைகளை மடக்கி மார்பின்மீது வைத்துக் கொண்டு படுத்துக் கொள்ள வேண்டும்" என்று பெட்டிக்குள் படுத்தவாறே சொல்லிக் கொண்டிருந்தான்.

இந்தச் சந்தர்ப்பத்தைத்தான் சிப்பாயும் எதிர் பார்த்துக் கொண்டிருந்தான். அந்தப் பெட்டியின் மூடியைப் படார் என்று மூடினான். கொக்கிகளை மாட்டினான். "யமனே, நீயே அதற்குள் படுத்துக் கொண்டிரு. எனக்கு வெளியே இருப்பதே சௌகரியமாக இருக்கிறது!" என்று சிரித்துக்கொண்டே கூறினான்.

சவப் பெட்டியில் அடைத்த யமனை ஊருக்கு வெளியே ஓடிக் கொண்டிருந்த ஆற்றில் கொண்டு போய் எறிந்தான். ஆறு அந்தப் பெட்டியைச் சமுத்திரத்தில் கொண்டு போய்ச் சேர்த்தது. சமுத்திர அலைகள் இந்தப் புறம் அந்தப்புறம் வருஷக் கணக்காக அலைக்கழிக்க மிதந்து கொண்டிருந்தான் யமன்.

ஊரில் மக்களோ, மீண்டும் யம பயம் நீங்கி வாழத் தொடங்கினர். சிப்பாயை வாயார மனமார வாழ்த்தினர். சிப்பாயோ நாளுக்கு நாள் இளமை அடைந்து வருவதைப் போல உற்சாகமாக இருந்தான். பேரன் பேத்திகளுக்கெல்லாம் கல்யாணம் பண்ணி வைத்தான். அவர்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டும், வாழ்க்கை எப்படி நடத்த வேண்டும் என்றெல்லாம் கூறினான். அவன் வீட்டிலும் வயலிலும் ஏதாகிலும் வேலை செய்து கொண்டே இருந்தான். மொத்தத்தில் அலுப்பு சலிப்படையாமல் வேலை செய்து வந்தான்.

சிப்பாய் இப்படி உற்சாகமாக இருந்தபோது, கடலில் பெரும் புயல் அடித்தது. புயலில் சிக்கிய பெட்டி எங்கோ ஒரு பாறையின் மீது மோதிப் பிளந்தது. பெட்டி பிளந்து கொண்டதில், யமனுக்கு விடுதலை கிடைத்தது. யமன் தண்ணீரில் நீண்ட நெடுந்தூரம் நீந்திக் குற்றுயிரோடு கரையை வந்தடைந்தான். அப்படியே கரையில் சற்று நேரம் கிடந்தான். பிறகு தான் யமனுக்கே உயிர் வந்தது. மெல்ல எழுந்திருந்து தள்ளாடி, தள்ளாடி நடந்து சிப்பாயின் கிராமத்தை அடைந்தான்.

இந்தத் தடவை யமன் சிப்பாயின் வீட்டுக் கொல்லைப் புறம் போனான். கொல்லையில் போய் ஒளிந்து கொண்டான். சிப்பாய் வெளியே வரும்போது, அவனை அப்படியே பற்றி இழுத்துக் கொண்டு போய்விட வேண்டும் என்பது அவன் திட்டம்.

அது வயலில் விதை தெளிக்கிற காலம். சிப்பாய் தன் வீட்டுக் கொல்லையிலுள்ள களஞ்சியத்திலிருந்து விதைக்க நெல் கொண்டு போகத் தன் 'கோட்டு'க்குக் கீழ் ஒரு பையை வைத்துக் கொண்டு வந்தான். நெல் களஞ்சியத்துக்குப் பக்கத்தில் சிப்பாய் வந்ததும், யமன் தன் மறைவிடத்தை விட்டு வெளியே வந்து, "அப்பனே! இந்தத் தடவை நீ தப்ப முடியாது...!" என்று கூறினான்.

சிப்பாய், உண்மையிலேயே இந்தத் தடவை யமனிடமிருந்து தப்பமுடியாது என்று தெரிந்து கொண்டான். இருந்தாலும் 'ஒரு முயற்சி செய்து பார்ப்போம்' என்று ஒரு தந்திரத்தில் இறங்கினான். அதாவது தன் கோட்டின் உள் பக்கம் வைத்திருந்த பையை எடுத்தான். அது பார்ப்பதற்கு, சிப்பாய் தன் மந்திரப் பெட்டியை வைக்கும் பை போலவே இருந்தது. அதை மெல்லக் கையில் எடுத்துக் கொண்டு, "யமனே, வந்து விட்டாயா! மந்திரப் பெட்டி வாசமும் சேற்றுக் குட்டை வாசமும், அனுபவித்து ரொம்ப நாட்களாகிவிட்டன. மீண்டும் அனுபவிக்க வேண்டும் போல் உனக்குத் தோன்றுகிறது இல்லையா!" என்று சொல்லிக் கொண்டே அந்தப் பையைப் பிரித்துப் பெட்டியை எடுக்கப் போவது போல் பாவனை செய்தான்.

அவ்வளவுதான்; யமன் பிடித்தான் ஓட்டம்.

அன்றிலிருந்து யமனுக்கு ஒரே பயம், எங்கே தான் சிப்பாயின் கண்களில் பட்டுவிடுவோமோ, பட்டு விட்டால் மந்திரப் பெட்டியில் போட்டுச் சேற்றுக் குட்டையில் அழுத்தி விடுவானோ என்று.

அதனால் அப்பொழுதிலிருந்து யமன் மக்களின் உயிர்களை, அவர்கள் கண்ணில் படாமல் மறைந்து நின்றே பறித்து வருகிறான்.

சிப்பாயும் அதற்குப் பிறகு சந்தோஷமாக வாழ்ந்து வரலானான். ஏன், அவன் இன்றும் உயிர் வாழ்கிறான் என்று மக்கள் சொல்லி வருகின்றனர்.

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk Madras - 10. Editor: Mi. Pa. Somasundaram

பத்மினி தனது எழில்
வாய்ந்த வதனத்துக்கு நிர்மலமான,
வெண்மையான லக்ஸ்
டாய்லட் சோப்பை நம்புகிருள்




சினிமா நட்சத்திரங்களின் சுத்தமான, வெண்மையான அழகு தரும் சோப்

இந்தியாவில் தயாரித்தது. LTS. 468-50 TM

